*Ūl̲iyan̲*

*Malar 7, ital̲ 14*

*December 21, 1926*

Record no. 148

சென்னைப் பதிவு எண் கடுஅ. | தனி இதழ் விலை அணா ஒன்றரை. | தந்தி விலாசம்:—[illegible]

# ஊழியன்

| சந்தா விபரம். | |
|---|---|
| வருடச் சந்தா ... | ௩—௦—௦ |
| ஆறுமாதச் சந்தா ... | ௧—௦—௦ |
| வெளிநாடு வருடச் சந்தா | ௪—௦—௦ |

செவ்வாய்தோறும் நிகழ்வது.

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

விளம்பர விகிதம். அங்குலம் ஒன்றுக்கு வாரம் ஒன்றுக்கு ௦-௪-௦ நீடித்த விளம்பரம் அங். ஒன்றுக்கு ௦-௩-௦ ஒப்பந்த விளம்பரவிகிதத்திற்குக் காரியதரிசிக்கு எழுதவும்.

குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு. —திருக்குறள்.

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல். —திருக்குறள்.

மலர் எ. காரைக்குடி. அட்சய-வரு மார்கழி-மீ கூ-வ (உக—கஉ—உக) இதழ் கச

## மலர்மணம்.

### பொது வாழ்வு.

(வ. ரா.)

பொது வாழ்வு என்ற சொற்களை மட்டும் நாம் அடிக்கடி உபயோகப்படுத்தி வருகின்றோம். அவைகள் ஒரு மந்திரம் போல கருதப்பெற்று, உச்சரிக்கப்பட்டு வருகின்றன. பொது வேலை என்றால் எவருக்கும் சிறப்பாக உரித்தாயில்லாத வேலை என மதித்து, தனித் தனி நபர்கள் அதைத் தமதாக பாவிப்பதுமில்லை; அதற்காகப் பாடுபடுவது மில்லை. பொது வேலையைப்போல, பொது வாழ்வும் யோசனையின்றி நடத்தப்பெறுகின்றது, பேசப் பெறுகின்றது. நம்முடைய ''பொது வழ்வின் முற்போக்கு'' என்பதைப்பற்றிப் பிரசங்கம் செய்ய எத்தனிக்காதவர்கள் யாவர்? பிரசங்கத்துக்கு விஷயம் இல்லாமற் போயின், ''பொது வாழ்வு'' ''தற்கால நிலைமை'' என்பவைகளைப் பற்றிக் கதம்பப் பிரசங்கம் செய்பவர்களிற் பலரை நாம் அனைவரும் பார்த்திருக்கின்றோம்.

* * *

பொதுவாழ்வு என்பது யாது, பொது வாழ்வை எவ்வாறு சமைப்பது, சமைத்த பொது வாழ்வை எவ்வாறு செழித்தோங்கச் செய்வது—இவைகள் பொருத்தமுள்ள கேள்விகள். இவைகளைப் பற்றித் தனித்தும் கலந்தும் யோசிப்பது நாட்டு மக்களின் கடமையாகும். இந்தியர்களின் பொது வாழ்வின் தோற்றம் காங்கிரஸ் மகாசபையில் மிகுதியும் காணப்பெறுகின்றது எனக்கூறுபவர்கள் இருக்கின்றார்கள். இல்லை என்று சொல்லுபவர்களும் இருக்கின்றனர். பொதுவாழ்வு என்பதே இல்லாத ஒரு சங்கதியாகும் என்று மறுப்பவர்களும் இருக்கின்றார்கள். பொது வாழ்வு இல்லையானால், மக்கள் ஒற்றுமையுடன் வாழ முடியாது என்றுவற்புறுத்துபவர்களும் உண்டு.

* * *

நீரையும் பாலையும் கலந்து சாப்பிட்டால், அது நீருமல்ல, பாலுமல்ல. அதுபோல, பொது வாழ்வு என்பது உருவ மில்லாத தொன்று என்று சிலர் விகடம் பேசலாம். ஆனால் விகடத்தினால் பொருளின் உண்மை விளக்கமுறாது. பொது வாழ்வு ஒரு நாட்டிற்குத் தேவையா, இல்லையா என்பது கேள்வி. மனிதனுக்கு உணவு எவ்வளவு தேவையோ— உணவை மனிதன் பல பக்குவங்களில் பல வகைகளாக உட்கொள்ளலாம். அதைப் பற்றி இப்பொழுது வாதம் வேண்டாம்.—நாட்டுமக்களுக்குப் பொது வாழ்வு அவ்வளவு தேவையாகும். பொது வாழ்வு இல்லையாயின், நாட்டு மக்கள் ஒற்றுமையுடன் செயல் செய்யமுடியாது. ஒரு மனப்படாத செயல் சிதறுண்டுபோகும்.

* * *

குடும்பப் பொதுவாழ்வுக்குத் தூண்டுதல்களாயிருக்கும் கருவிகள் யாவை? வீடு என்ற அமைப்பு. பின்னர் உறவு; பின்னர் சொத்தும் சுகமும்; அதன் பின்னர் தற்காப்பு. அதற்குப் பின்னர், மனிதனுடைய கூட்டுறவு உணர்ச்சி. மேற் கூறிய ஆறு கருவிகளுஞ் சேர்ந்து, குடும்ப வாழ்வை துவக்கத்தில் சாத்தியமாகச் செய்கின்றன. மேற்கூறிய கருவிகளால் விளையும் பயனைப் பெற்றவுடன், மனிதன் தனது குறியை உயர்த்திக்கொள்ளுகிறான். திரளான ஜன சமூகத்தையும் கடவுளையும் நோயையும் கலைகளையும் பற்றி, மனிதன் ஆராய்ச்சி செய்கின்றான். குடும்ப வாழ்வு தோன்றுவதும் செழிப்பதும் மேற்கூறிய முறைகளினாலே, கருவிகளின் மூலமாய் என்று நம்மில் ஒவ்வொருவரும் அனுபவத்தைக் கொண்டு தெளிந்து கொள்ளலாம். இதிலே யாதொரு ஜால வித்தையும், அற்புதமுமில்லை. சாதாரண உணர்ச்சிகளின் பயனுயுள்ள அனுபவத்தைப் பெறாதவர்களுக்குத்தான், குடும்ப வாழ்வின் உற்பத்தி தெளிவாகத் தோன்றாது.

* * *

பொதுவாழ்விற்கு இன்றியமையாத உணர்ச்சி தேசபக்தியாகும். தேசம் என்று ஏன் ஒன்றை வகுக்கவேண்டும் என்ற கேள்வியை இப்பொழுது கேட்பதில் பயனில்லை. மரங்களின் கீழே, குகையில், வாழ்ந்த மனிதர்கள் ஏன் வீட்டையும் கலியாணத்தையும் நாடினார்கள் என்று இப்பொழுது கேட்பதனால் ஏதேனும் நற்பயன் விளையுமா? வீட்டை இடித்துவிட்டு, காட்டுவாழ்வைக் கைக்கொண்டாலொழிய, மனிதனுக்கு முற்போக்கு ஏற்படமாட்டாது என்று இப்பொழுது கூறுவதில் பயனுமில்லை, பொருளுமில்லை. தேவையால் தோன்றிய பழக்கங்களையும் அமைப்புகளையும் எவ்வாறு, தற்காலத்துக்கு ஏற்றவாறு, பயன் படுமாறு செய்யலாம் என்பதைப்பற்றி ஆராய்வதுதான் அறிவுடைமையாகும். உலகத்தில் நாடு என்றும் மொழி என்றும் தனித்த நடை, உடை, பாவனைகள் என்றும் தோன்றி விட்டன. எனவே அவைகளைப் பயன்படு முறையில் உபயோகித்துக்கொள்ள வேண்டும்.

* * *

ஊருக்கு நடுவே யோடும் கால்வாயைச் செப்பனிட்டு வைத்துக் கொண்டால், அதனால் ஊரார் அனைவரும் நலன் அடைகின்றார்கள். அதுபோல, தேசப்பற்றுடன் நாட்டை, அந்த நாட்டில் வசிப்பவர்கள் காத்துக் கொண்டால், பொது வாழ்வுக்குத் தேவையான அடிப்படை உணர்ச்சியை அந்த நாட்டார் பெற்றுவிடுகின்றார்கள். எல்லோரும் கடவுளின் குழந்தைகள் என்ற வேதாந்தைக் கொண்டுமட்டும், வளர்ச்சி பெறாத, வயிற்றை மட்டும் அறியும் மனிதர்களை ஒன்று சேர்க்க முடியாது. எனவே தேசபக்தி உணர்ச்சியை நாட்டாரிடைப் பரப்புவது பொதுவாழ்வைக் கோருபவர்களின் கடமையாகும்.

* * *

ஒரு நாட்டில் வசிக்கும் மக்கள் அந்த நாட்டுக்குச் சொந்தமாயினும், அவர்களுக்குள்ளாகவே, சமய முதலிய பலவகை வேறுபாடுகள் காணப்பெறுகின்றன. சமய உணர்ச்சிக்கும் தேசபக்திக்கும் முரண் என்பதை ஆராய்தல் நமது கடமையாகும். குடும்பத்தில் பலவகை மனப்பான்மை கொண்டவர்கள் குடும்பப்பற்று என்ற கெட்டியான கயிற்றால் பிணைக்கப்படுவதைப் போல, பல வேறு சமயங்களைத் தழுவுகின்றவர்களும் தேசபக்தர்களாக விருக்கலாம். சமய உணர்ச்சி ஆன்மாவின் மலர்ச்சிக்கும் மனிதனுடைய தனி வாழ்விற்கும் தேவை. நாட்டின் பொதுவாழ்விற்கும் நாட்டின் முன்னேற்றத்துக்கும் தேசபக்தி இன்றியமையாதது. சமய உணர்ச்சியும் தேசபக்தியும் முரணான உணர்ச்சிகள் அல்ல. கனிகளை அருந்துபவன் மலர்களையும் அணிந்து கொள்ளலாம். சமய உணர்ச்சியும் தேசபக்தியும் பரஸ்பரம் ஆதரவு அளிப்பவை.

* * *

சமய உணர்ச்சிக்கும் தேசபக்திக்கும் முரண்போல எண்ணி, நமது நாட்டில் பூசல்கள் நிகழ்கின்றனவே என்று சிலர் கேட்கலாம். கணித நூல் சாத்திரி இலக்கியப்புலவனுடன் சண்டையிட்டால் எவ்வாறு இருக்கும்? இரண்டு கலைகளும் மனித வருக்கத்துக்குத் தேவையானவை என்று கொண்டு, ஒருவர் மற்றவருக்கு உதவிசெய்வதும், ஒருவர் மற்றவரை மதிப்பதும் அறிவாகும். சமய உணர்ச்சியைத் தோற்றத்திலும் தேசபக்தியைப் போரிலும் பார்க்கும் பழக்கம்தோன்றுதொட்டு உலகத்தில், அறியாமையால் வேரூன்றிக் கிடக்கின்றது. சமய உணர்ச்சியை நற்செயலில், தொண்டில், சக்திப் பெருக்கில், தியாகத்தில், துணிவில், உண்மை கூறுவதில் காணவேண்டும். தோற்றத்தில் [illegible]மையாகும். தேசபக்தியை விரிந்த உள்ளத்தில், எல்லையற்ற அன்பில், விட்டுக்கொடுக்கும் தன்மையில், பிறருக்காகத் தன்னுயிரை விடும் மனப்பான்மையில் காணவேண்டும்.

* * *

தேசபக்தியும் சமய உணர்ச்சியும் நாட்டின் பொதுவாழ்வுக்குத் தேவை. நாட்டைக் காக்க வேண்டுமென்ற ஆவல் ஒருபுறமிருக்க, அந்த நாட்டின் மூலமாய் மக்களின் சுகத்தை வளர்ப்பது, பொதுவாழ்வின் [illegible] கருவியாகும். செல்வப்பெருக்குக்கோ, [illegible]களிப்புக்கோ, அறிவுப்பயிற்சிக்கோ, [illegible]கோ, தற்காப்புக்கோ, [illegible]நிற்காகவோ, மனிதர்கள் ஒன்று கூடி வாழ்கின்றார்கள், அல்லது கூட்டமாகச் சேருகின்றார்கள். பஞ்ச பூதங்களால் ஆக்கப்பெற்ற உடல் இருக்கும் வரையில், மனிதனுக்கு சுகத்தை நாடும் உணர்ச்சி இருக்கும். சுகத்தைப் பெருக்கும் சாதனங்களைக்காணுவதும் [illegible]பதும், சிறந்த அரசாங்கம் இருந்தால் தான் முடியும். அதிகாரத்துக்கு ஒரு எல்லை ஏற்பட்டாலொழிய, அரசியல் பொறுப்பை செவ்வனே நடத்துதல் முடியாது. அதிகார எல்லை குறுகவேண்டுமானால், அதாவது சுதந்திரம் வளரவேண்டுமானால், தனி மனிதனுக்கு அடக்கமும் கடமை உணர்ச்சியும் வேண்டும். எனவே பொது வாழ்வுக்குத் தேவையானவை தன்னடக்கமும் கடமை புணர்ச்சியுமாகும்.

* * *

வாழ்வு என்பது நிகழும் ஒரு நிகழ்ச்சியாகும். வாழ்வு தேக்க குட்டையல்ல. எனவே வாழ்வுக்கு ஒரு குறி வேண்டும். குறியில்லாத வாழ்வு வாழ்வாகாது, அது சாவாகும். [illegible] பிணங்களாக நாம் வாழ்வதைக் காட்டிலும், சாவது உத்தமமான கருமம் ஆகும். காரியமுறையில் எவ்வளவு தூரம் நாம் வெற்றியடைகின்றோமோ, அதற்குத் தக்கபடி, நமது குறியும் உயர்ந்து, மேலேறும். நமது தற்போதைய குறி மிகவும் கேவலமானதாக இருப்பதினாலேதான், நமது பொதுவாழ்வு இன்னும் சமைக்கப்பெறவில்லை.

* * *

சாதனங்களைக் கைக்கொள்ளாமல், அவைகளால் விளையும் பலனை நாட வேண்டுவது மடமையாகும்; அல்லது வீண் கனவாகும். கனவு, காண்பதற்கு இன்பமாயிருக்கும்; பிறரிடம் அதைச் சொல்லும்பொழுது இனிப்பாயிருக்கலாம்; ஆனால் சோம்பலையும் சோர்ந்த மனத்தையும் அது வளர்க்கும். பொது வாழ்வுக்கு இன்றியமையாத உணர்ச்சிகள் (க) தேசபக்தி (உ) நேர்மையான சமய உணர்ச்சி, தோற்றமல்ல (ங) தன்னடக்கம் (ச) துணிவு (ரு) விட்டுக்கொடுக்கும் தன்மை (சு) கட்டுப்பாட்டுக்கு அடங்கி நடக்குங்குணம் (எ) அறிவு; இவைகள்தான் பொது வாழ்வைக்கோருவோரும் ''சப்த ரிஷிகள்'' ஆகும்.

# "இளமை இந்தியா"க் குறிப்புகள்.

(மகாத்மா காந்தி எழுதியது.)

"சர்வஜனத்தின்" பெருமிதநலன்.

"இளமை இந்தியா"வை விடாமல் படிப்பவர் கீழ்க்கண்டதை அனுப்புகின்றார்:—

"சில சந்தர்ப்பங்களில் உயிரைப் போக்கவேண்டிய கடமையைபற்றி 'இது ஜீவகாருண்யமா' என்ற தலைப் பெயருடன் "இளமை இந்தியா" பத்திரிகையில், தாங்கள் தொடர்ந்து கட்டுரைகள் எழுதிவருகின்றீர்கள். (அந்தக் கடமையைப்பற்றி) சிறப்பாக, நவம்பர்மீ ச-ந்தேதி எழுதியிருந்தீர்கள். தங்கள் கருத்தை ஆதரிக்கக்கூடிய பத்திரிகைத் "துணுக்கு" ஒன்று கிடைக்கப்பெற்றிருக்கிறது. துணுக்கு ஒரு ஆண்டுக்கு முன்னர் வெளிவந்ததாகும்.

"டைம்ஸ் ஆப் இந்தியா"வுக்கு சிறப்பாக வந்தது.

விட்டில்டன் (கொலராடோ) நவம்பர்மீ கஅவ கககஉரு.

"ஹாரோல்ட பிளேயர் என்பவர் காட்டுபுற வைத்தியர். அவருக்கு ககவயதிருக்கும். அவர் தமது மகளுக்கு "மயக்கம்" கொடுத்துவிட்டார். ஏனெனின், தமக்கு இறுதி நெருங்கிவிட்டதென்றும் தாம் இறந்த பின்னர் அவளை எவரும் ஆதரிக்கமாட்டார்கள் என்றும் அவர் கருதினர். (கோர்ட்டில் விசாரிக்கப்பெற்றபொழுது) ஜூரிகள் பதினன்கு மணிநேரம் கலந்து பேசியும் ஒற்றுமைகொண்ட முடிவுக்குவரவில்லை. பதினொருபேர்கள் வைத்தியரை விடுதலைசெய்ய வேண்டும் என்று கூறினர்கள். வைத்தியரின் பேரில் குற்றம் சாட்டியவர்களே வழக்கைத் தள்ளிவிடுமாறு நீதிபதியைக் கேட்டுக்கொண்டார்கள். வைத்திய பிளேயர் அவர்களின் வக்கில் திரு. ஹௌரி அவர்கள் கூறியதாவது:—சென்ற முப்பத்திரண்டு ஆண்டுகளாக வைத்தியரவர்கள் அந்தப் பெண்ணைப் பாதுகாத்துவந்தார். அத்தகைய பெண்ணைப் பிறர் பேரில் சுமையாக வைத்துவிட்டுப்போக, அவர் மனமிசையவில்லை. தமது மகளை மயக்கம் கொடுத்துக் கொன்றதில், டாக்டர் அவர்கள் சரியான, நேர்மை கொண்ட காரியத்தைச் செய்தார். அந்தப் பித்துக்கொண்ட பெண்ணுக்குக் கைகால்களில்லை. பேசத்தெரியாது. யோசிக்கவும் முடியாது. ஏற்கனவே மெல்லப் பெற்ற உணவைத்தான் அவளுக்கு ஊட்டவேண்டும். அந்தப் பெண்ணுக்கு ஆன்மா இருக்க முடியாது."

சென்ற ஆண்டு, இதே காலத்தில் ஒரு பாரிஸ் வழக்கைப்பற்றி நான் படித்ததாக எனக்கு நினைவுவருகின்றது. நாடகசாலை வேஷதாரி பெண்பிள்ளை ஒருவள் தனது கணவனைக் கொன்றுவிட்டாள். குணமாவதற்கு சாத்தியமில்லாத நோயின் பொறுக்கமுடியாத வலியால், அவன் துயரமடைந்து வந்தான். தன்னைக் கொன்றுவிடுமாறு தனது மனைவியை அவன் வேண்டிக்கொண்டான். (கொன்ற) வேஷதாரி கொலைக்குற்றத்திற்காக விசாரிக்கப்பெற்றுள். சந்தர்ப்பங்களை உத்தேசிக்கையில், அவள் யாதொரு குற்றமும் செய்யவில்லை என ஜூரிகள் தீர்ப்புச் சொன்னதன்பேரில், அவள் விடுதலை செய்யப்பெற்றுள். இத்தகைய தீர்ப்புக்கு ஆதாரமாயுள்ள சட்டம் பிரான்ஸ் நாட்டில் இருப்பதாகத் தெரியவில்லை. மேற்கூறிய சந்தர்ப்பங்களில் அனுமதிக்கப்பெற்ற சிலர் யாதொரு குற்றத்துக்கும் ஆளாகாமல், உயிரைப்போக்கலாம் என்ற சட்டம் டென்மார்க் தேசத்தில் இருப்பதாக, நான் படித்திருக்கிறேன். தங்களுக்கும் என்னைப்போல, "இளமை இந்தியா"வைப் படிப்பவர்களுக்கும் இந்தக் குறிப்புகள் பயன்படும் என்று நான் எதிர்பார்க்கிறேன்."

நான் இந்தக் கடிதத்தை அப்படியே பிரசுரிக்கின்றேன். ஏனெனின், அது, எனது சொந்த நிலைமையை விளக்கிக் காட்ட, எனக்கு உதவுகின்றது. இந்த நிருபர் "இளமை இந்தியா"வைத் தொடர்ந்து படிப்பவர். கவனித்துப்படிக்கும் இவரே, என்னுடைய நிலைமைக்குத் தவருகப் பொருள் கொண்டுவிட்டால்— தவருகக் கொண்டுவிட்டார் என்பது அவருடைய கடிதத்தினின்றும் விளங்குகின்றது— மேலழுந்தின வாரியாகப் படிப்பவர்களில் எத்தனை பேர்கள் இவரைப்போல, தவருகப் பொருள்கொண்டிருக்கமாட்டார்கள்? பரம்பரையாக, நாம் பலாத்காரத்தில் வளர்ந்து வந்திருக்கின்றோம். எனவே, பலாத்காரத்தைப் பிரயோகம் செய்ய, நாம்தயாராகக் காத்துக்கொண்டிருக்கின்றோம். நமது உள்ளமும் கடினமாகிவிட்டது. இந்த நிலைமையில், நான் கூறுவதைத்தவருகவும் கொள்ளக்கூடும் என்று பல நண்பர்கள் இந்த ஆபத்தைச் சுட்டிக்காட்டி, எனக்குக் குறிப்பிட்டிருக்கிறார்கள். சிக்கலான கேள்விகளுக்கு விடைதேடுவதில் (அவைகளை ஆராய்ச்சி செய்வதில்) ஒருவன் மிக்க கவலையும் கவனமும்தான் செலுத்த முடியும்— செலுத்தவேண்டும். அடிப்படையாகவிருக்கும் உண்மைகளைப்பற்றித் தாராளமாயும் உண்மையுடனும் வாதம் செய்வதில், சொற்கள் தவருகப் பொருள்கொள்ளப் படக்கூடுமே என்ற அச்சத்தினுல், வாதத்தை நிறுத்திவிடக்கூடாது. என் சம்பந்தப்பட்டவரையிலும், பிரார்த்தனை மனப்பான்மைகொண்ட வாதத்தினுலும், விளக்கத்தினுலும், நோக்கங்களைப் பரிமாறிக் கொள்ளுவதனுலும்மட்டும், நேரான வழியில் நிற்க, நேரான கருமத்தைச் செய்ய, நான் கற்றுக்கொள்ளுவேன். ஒரே கொள்கையை நானும் நிருபரும் வியாக்கியானம் செய்கின்றோம். என்றாலும், அவருக்கும் எனக்கும் வியாக்கியானத்தில் அபிப்பிராயபேதம் கிளம்பியிருப்பதாக, இந்த வாதத்தினின்றும் தெரிகிறது.

நான் கூறிய சோதனை அளவுக்கிணங்க, டாக்டர் பிளேயர் அவர்கள் விடுதலை செய்யப்பெற்றது சரி என்பது எனது கருத்து. ஆனல் டாக்டர் தமது புதல்வியின் உயிரைப் போக்கியது தவறு என்று நான்கருதுகின்றேன். அவரைச் சுற்றியிருக்கும் மனிதர்களுக்கு ஜீவகாருண்யமில்லை என்று அவருடைய செயல் கூறுவதாகும். வேறெவரும் தமது மகள் கவனிக்கப்பெறமாட்டாள் என்ற அவர் எண்ணிக்கொள்ளுவதற்குத் தக்க ஆதாரம் இல்லை. டாக்டர் பிளேயர் இருந்த நிலைமைக்கும், என்னுல் கூறப்பட்டுள்ள சந்தர்ப்பங்களிலிருக்கும் நாய்களின் நிலைமைக்கும் மிகுதியும் வேற்றுமை உண்டு. பித்துக்கொண்டவர்களுக்கு ஆன்மா கிடையாது என்ற நோக்கத்தையும் என்னுல் ஆதரிக்கமுடியாது. விலங்குகளுக்கும் ஆன்மா உண்டு என்று நான் நம்புகிறேன்.

இன்னெரு நிருபர் தமது கஷ்டத்தைத் தெரிவித்திருக்கிறார். அது முன்கூறியதை விடக்கனமானதாகும். அதைப் பின் வருமாறு சுருக்கிக் கூறுகின்றேன்.

"(வெறி நாய்களைப்பற்றி) தாங்கள் கொண்டுள்ள மனப்பான்மையை நான் ஆதரிக்கின்றேன். அது தான் உண்மையான நிலைமை யாகும். பெரும் பாலோரின் பெருமித நலன் என்ற "உபயோக வாதிகளின்" கொள்கையைப்போல, முடிவில் தோன்றப்பட வில்லையா! அது தங்களுடைய நிலைமையாயின், உபயோக வாதிகளின் கொள்கைக்கும் தங்கள் அஹிம்சைக்கொள்கைக்கும் எங்கிருந்து, எவ்வாறுவேற்றுமைதோன்றும்? உபயோகவாதி அஹிம்சைப் பாசாங்கு செய்வதில்லை. அழிப்பதால், பெரும்பாலோருக்குப் பெருமித நலன் விளையும் என அவனுக்குத் தோன்றுமாகில், உபயோகவாதி உயிரைப் போக்குவதற்குப் பின் வாங்குவதில்லை."

தோற்றத்தில், செயல் ஒன்ருகப்படும்; ஆனல் செயலுக்குத் தூண்டுதலாயிருக்கும் நோக்கத்தைப் பொறுத்து, அந்தச் செயல் (பொருளில்) மாறுபாடு கொள்ளும். மேநாட்டில், அஹிம்சை என்பது மனிதவருக்கத்தோடு முடிவடைந்து வருகின்றது. மனிதவருக்கத்தின் பெருமித நலன் என்ற காரணங்கொண்டு, ஆராய்ச்சியின் பொருட்டு, விலங்குகளைக் கொல்லுவதில் அவர்களுக்கு மனத்தடை ஏற்படுவதில்லை. அதே "உபயோகம்" என்ற கொள்கையைக் கொண்டு, மனித வருக்கத்துக்கு காலனுய்த் தோன்றியிருக்கும், போர்க்கருவிகளைக் குவிப்பதற்கும் அவர்கள் பின் வாங்குவதில்லை. அஹிம்சைத் தொண்டனும் உபயோகவாதியைப் போலவே, "நாச"-காரியம் ஒன்று செய்திருக்கலாம்; ஆனல் ஆராய்ச்சிக் கொலையையும் போர்க்கருவிகளைப் பெருக்குவதையும் ஆதரித்து, அவைகளுக்குத் தான் உடந்தையாயிருப்பதைக் காட்டிலும், தன்னுடைய உயிரை விடுவதை உயர்வாகக் கொள்ளுவான்.

அஹிம்சையின் பக்தன் "உபயோக" வாதியின் கொள்கையை ஆதரிக்கமுடியாது. சர்வஜனங்களின் பூரண நலனை, அஹிம்சைத் தொண்டன் நாடி, அந்தக்குறியைக் காணும் முயற்சியில் அவன் உயிரை விடுவான். ஏனையோர் வாழும் பொருட்டு, தான் சாக, அவன் விருப்பங்கொள்ளுவான். ஏனையோரோடு அவனும் தொண்டு செய்வான். ஆனல் அந்தத்தொண்டில் அவன் சாகவும் நேரிடும். சர்வஜனங்களின் பூரண நலன் என்பது தன்னகத்தில் பெரும்பாலோரின் நலனையும் அடக்கிக் கொண்டிருக்கிறது. எனவே, அஹிம்சைத் தொண்டனும் உபயோக வாதியும் தங்கள் வழியில் அநேக அம்சங்களில் ஒத்துப்போகக்கூடும். ஆனல் பிரிந்து, முரணனவழிகளில் அவர்களிருவரும் உழைக்கவேண்டிய காலமும் வந்து சேரும். தருக்கமுறைப்படி பார்த்தால், உபயோக வாதி தன்னைத் தியாகம் செய்து கொள்ளமாட்டான். சர்வஜனங்களின் பூரண நலனை நாடுபவன் தன்னையும் அர்ப்பணம் செய்துவிடுவான். அஹிம்சைத்தொண்டன் நாயைக் கொல்வானுகில், அவன் பலவீனத்தால் அவ்வாறு செய்கின்றன்; அல்லது நாயின் நலத்தின் பொருட்டு—இவ்வாறு நேருவது அருமை—கொலை செய்கின்றன். நாயின் நலன் யாது என்று தீர்மானிப்பது கடினமான வேலை என்பதும் தீர்மானிப்பதில் தவறு இழைக்கக்கூடும் என்று கூறுவதும், செயலைத் தூண்டும் நோக்கத்துக்குப் பொறுத்த முன்னதல்ல. அஹிம்சைத் தொண்டனுடைய நாசவேலை எப்பொழுதும் மிகக் குறைந்த அளவிலிருக்கும்; உபயோக வாதியின் நாச வேலைக்கு எல்லை கிடையாது. அஹிம்சை முறையில் நோக்கினுல், சென்ற போர் முழுதும் தவருகும். உபயோக நோக்கத்தால் மதித்தால், தத்தம் உபயோக எண்ணத்துக்கு ஏற்றவாறு, ஒவ்வொரு கட்சியும் சமாதானம் கூறிவிட்டது. 'உபயோக' என்ற சமாதானம், ஜலியன் வாலா பாக் படுகொலைக்கும் அதைச் செய்தவர்களால் கூறப்பெற்றது. ஆனல், சர்வஜனநலன் என்ற கொள்கைப்படிக்கு, இந்தச் செயல்கள் எதையும் ஆதரிக்க முடியாது.

---

ஏனைய தொண்டுகள்.

"இந்தியன் ஒபினியன்" பத்திரிகையினின்றும் ஒரு துணுக்கை நண்பர் ஒருவர் போனிக்ஸ் நகரினின்றும் (நேட்டால்நாடு) அனுப்பித் தந்ததில், "இளமை இந்தியா"வில் சிறிது காலத்திற்கு முன், எமிலி ஹாப் ஹௌஸ் அவர்களைப்பற்றி சேனுபதி ஸ்மட்ஸ் அவர்கள் வாழ்த்துக்கூறிச் செய்த பிரசங்கம் பிரசுரம் செய்யப்பெற்றதில், சில பகுதிகள் விடப்பட்டுப்போயின வென்று எனக்குக் குறிப்பிட்டு எழுதியிருக்கிறார். போயர் யுத்தத்திற்குப் பின்னர், திக்கற்ற போயர் பெண்பிள்ளைகளினிடையே எமிலி ஹாப் ஹௌஸ் அவர்கள் நூல் நூற்றலையும் நெய்தலையும் பரப்பிய ஆயத்தம் சில அந்தப் பகுதிகள் குறிப்பிடுகின்றன. பிரஸ்தாபப் பகுதிகள் இதோ இருக்கின்றன:—

"அவர்கள் நமக்காக ஏனைய தொண்டுகளும் இயற்றினர்கள். போருக்குப் பின்னர், நம்மிடையே அவர்கள் வந்து வசித்து, நமது பெண்மணிகளுக்குக் குடிசைத்தொழில் கற்பித்துக்கொடுத்தார்கள். பகுதியில் அந்த வேலை இன்னும் நம் மத்தியில் நடைபெற்று வருகின்றது. வாழ்க்கையின் நிலைமைகளினுலேதான், நூற்றல், நெய்தல் தொழில்கள் நமது நாட்டில் பொதுத் தொழில்களாகாமல் தடைபட்டுப் போனதைக் கண்டு, நான் வருந்துகின்றேன். ஆனல் இந்தத் துறையிலும், அவர்களுடைய தொண்டின் சிறப்பான பயன்கள் தங்கி நிற்கின்றன. அவர்கள் தளராத உறுதிகொண்டு, உழைத்ததனுலே, அவர்களுடைய நூற்றல் பள்ளிகளைச் சேராத பலருக்கும் கூட, உற்சாகம் உண்டாயிற்று. நமது நாட்டில் அவர்கள் ஆற்றிய தொண்டு மகத்தானது; அவர்கள் செய்த வேலை கடினமானது. அதன் பயனுக, இறுதியில், அவர்களுடைய தேக சுகம் சாசுவதமாக அழியப்பெற்றது. போருக்குப் பின்னர் அவர்கள் செய்த தொண்டை, நான் பெரிதாகக் கருதவில்லை. போர்க்காலத்தில், போயர்கள் ஒதுக்கிடங்களில் வசிக்க வற்புறுத்தப்பெற்ற காலத்தில் அவர்கள் ஆற்றிய தொண்டை, பெரிதாக, நான் மதிக்கின்றேன்.

"சென்ற ஐரோப்பியப் போருக்கு முன்னரும், அது நிகழ்ந்த காலத்திலும், அது முடிவுபெற்ற பின்னரும், அவர்கள் செய்த வேலையைப்பற்றிக் குறிப்பிட, எனக்கு நேரமில்லை. அவர்களுக்கு இறுதியில் மிகுந்து நின்ற தேக சுகத்தையும் சக்தியையும், அவர்கள் ஜர்மனியில் செலவழித்தார்கள். போருக்குப் பின்னர், பயங்கர நிலைமையில், துயரத்துடனும் பட்டினி கிடந்தும் வாழ்ந்து வந்த ஜர்மன் பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் அவர்கள் உதவிபுரிந்து வந்தார்கள். தென்னுப்பிரிக்காவில் மட்டும் அவர் பெயர் புகழுடன் மதிக்கப்பெறவில்லை; ஐரோப்பாக் கண்டத்தில் ஆயிரக்கணக்கான வீடுகளிலும் அவ்வாறே மதிக்கப்பெற்று வருகின்றது."

பிரசுரமாகாமல் விடப்பெற்ற வேறு முக்கியப் பகுதி பின்வருமாறு:—

"வாழ்க்கையின் உயர்ந்த மகத்தான பொருள்களுக்கு, பக்தி செலுத்தியதற்காக, அவர்கள் மிகுதியும் இன்னலடையவேண்டியிருந்தது. அவர்களுடைய செயல் ஆங்கிலேயர்களால் அறிந்துகொள்ளப்படவுமில்லை; மதிக்கப்படவுமில்லை. உலக மக்கள் யாவரையும் சகோதரர்களாய்ப் பிணைக்கும் உயர்ந்த கடமைக்கு, நமது கடமைக்கு, வாழ்க்கைப் பெரும்பொருள்களினிடம் பக்திக்கு ஜயபேரிகையாக, எமிலி ஹாப் ஹௌஸ் அவர்கள் நமது சரித்திரத்தில் என்றும் விளங்கி நிற்பார்கள். குறுகிய நாட்டுப்பற்றுக்கும் மக்களின் உயர்தர இலட்சியத்தின்கண் இருக்கும் பக்திக்கும் உள்ள வேற்றுமையை மறக்கொணுச் சொற்களில், ரோமன் சக்கரவர்த்தி கூறியுள்ளார். "செக்ரோப்ஸின் அருமையான நகரே யென்று கவியழைத்துள்ளார்; கடவுளின் அருமையான நகரே யென்று நாம் அழைக்கலாகாதா?" நாம் தென்னுப்பிரிக்காவின் குடிமக்கள் மட்டுமல்ல, கடவுளின் மகத்தான நகரத்துக்கும் நாம் உரித்தானவர்கள் என்று நமது சரித்திரத்தில் காணப்பெறும் யாவையும் காட்டிலும், எமிலி ஹாப் ஹௌஸின் வாழ்வு நமக்கு நினைவுறுத்துகின்றது."



# கிழக்கு சர்வதேச சங்கம்.

(திரு: பனிந்திரநாத போஸ் "பீபிள்" பத்திரிகையில் எழுதியது)

ருஷியாவுக்கும் துருக்கிக்கும் பாரசீகத்துக்கும் நெருங்கிய உறவுகொண்ட ஒரு உடன்படிக்கை ஏற்பட்டுவிட்டதாக, சமீபகாலத்துக்குமுன், ராய்ட்டரால் தந்தி சொல்லப்பெற்றது. இந்த நிகழ்ச்சியால், ஆசியாவின் அரசியல் நிலைமை மாறுதல் அடைகின்றது. இப்பொழுதும் ருஷியா ஜாதிவிலக்கான நாடு எனக் கருதப்பெற்று, நாகரிகக் குழாத்தினின்றும் ஒதுக்கி வைக்கப்பெற்றிருக்கின்றது. நீண்டகாலமாக, ஜர்மனியும் இவ்வாறு கருதப்பட்டது. சமீபகாலத்துக்கு முன்புதான், ஜர்மனி சர்வதேச சங்கத்தின் உறுப்பாகச் சேர்த்துக்கொள்ளப்பெற்றது. ஜர்மனி, உலக வல்லரசுகளில் ஒன்ருகப் பாவிக்கப்பட்டுச் சேர்த்துக் கொள்ளப் பெற்றுலும், ருஷியநாடு, அதன் போல்ஷிவிக்க இயக்கச் சுறுசுறுப்பின் காரணமாக வல்லரசாக மதிக்கப்படவில்லை. பலமான கிளர்ச்சியினுல், ருஷியர்கள் சீனத் துருக்கிஸ்தானத்தில் வசிக்கும் ஜனங்களை, ஆங்கிலேயர்களின் இந்திய சாம்ராஜ்யத்துக்கு விரோதமாக எழுப்பிவிடுவார்கள் என்று ஆங்கிலேயர்கள் அச்சப்படுகின்றார்கள். சீனத்தில் நிகழ்கின்ற கலவரங்களில் போல்ஷிவிக்க ஏஜண்டுகள் கலந்துகொண்டிருக்கிறார்கள் என்றும் ஆங்கிலேயர்கள் சந்தேகம் கொண்டிருக்கின்றார்கள்; எனவே, ருஷியாவை, சர்வதேசச் சங்கத்தின் உறுப்புப்பதவியினின்றும் விலக்கி வைப்பது ஆங்கிலேயர்களின் நோக்கமாகும்.

பாரசீகத்தில் பாவிநிற்கும் முறைக் காய்ச்சலைப்பற்றி ஆராய்ச்சி செய்ய ஏற்றுக்கொண்டு, சர்வதேச சங்கம் பாரசீகத்தைத் திருப்திசெய்யப் பார்க்கின்றது. கீழ்நாடுகளில் தொத்து நோய்கள் பரவும் வழிகளையும் காரணங்களையும் ஆராய்ந்து அறிய, சர்வதேச சங்கத்தார், சிங்கப்பூரில் ஒரு சுகாதார அமைப்பைக்காண, எண்ணங்கொண்டுள்ளார்கள். சர்வதேச சங்கத்தின் நோக்கத்தைப்பற்றியே சந்தேகம் கொண்டிருக்கும் கீழ்நாட்டார்களுக்கு சர்வதேசசங்கத்தின் இந்த யோசனைகள், திருப்தி உண்டாக்குமா என்பதுதான் சந்தேகம். சமாதான எண்ணத்தை வளர்த்து, உலகத்தாரின் மனச்சான்றைத் தெளிவுபடுத்தி, போர் எண்ணத்தைத் தொலைத்து, எந்தப் போரிலும் முதலில் தாக்கியவர்கள் யாவர் என்று கண்டு, அவர்களுக்குத் தண்டனை கொடுப்பது, சர்வதேச சங்கத்தின் நோக்கமாகும். இந்த நோக்கத்தில் சர்வதேசசங்கம் நேர்மையுடன் நடந்துகொள்ளவில்லை என்று கீழ்நாட்டார்கள் சந்தேகம் கொள்ளுகின்றார்கள். ஐரோப்பியத் தன்மை படைக்காத பல நாடுகள் சர்வதேச சங்கத்திலிருப்பினும், சர்வதேச சங்கமென்பது ஐரோப்பிய தேசச்சங்கமாகிவிட்டது. அமெரிக்கா, ஐக்கியமாகாணங்கள் அதனின்றும் விலகிநிற்கின்றன. அபின் விஷயத்தில் சர்வதேசசங்கம் அளித்த தீர்ப்பினுல், சீனுவுக்குத் திருப்தி ஏற்படவில்லை. இந்தியா சர்வதேசசங்கத்தின் உறுப்பு. என்ருலும், தன்னுடைய பிரதிநிதியை நியமிக்க, அதற்கு உரிமை இல்லை. ஆனல், சர்வதேச சங்கத்தின் செலவுக்காக, அதிகமான பொருள் இந்தியா கொடுக்கவேண்டியிருக்கிறது.

சங்கத்தின் வேலைகளைக் கண்டு, கீழ்நாட்டார்கள் மிகுதியும் சந்தேகம் கொண்டு வருகின்றார்கள். தங்களுக்குச் சொந்தமான ஒரு அமைப்பைக் காண அவர்கள் யோசனை செய்து வருகின்றார்கள். ஏற்கனவே, சீனர்களும் ஜப்பானியர்களும் இதற்குத் தக்க முயற்சி எடுத்துக் கொண்டிருக்கின்றனர். சீனு, ஜப்பான், இந்தியா, ஆப்கனிஸ்தானம் முதலிய ஆசியாக்கண்டத்து நாடுகள் தனித்த ஒரு அமைப்பின் உறுப்புகளாக அமையவேண்டும் என்ற விருப்பத்தை, டோக்யோ (ஜப்பானின் தலைநகர்) நகரில் கூடிய அகில ஆசியா மகாநாடு நன்ருகக் குறிப்பிட்டுவிட்டது. அகில ஆசியாச் சங்கம் ஒன்றை மகா நாடு ஏற்கனவே நிறுவி விட்டது; அதுவே "கிழக்கு சர்வ தேச சங்கமாக" அமையலாம். இதோடு கூட, கிழக்கு சர்வதேச சங்க யோசனையைப்பற்றிய தந்திச் செய்தியும் நமக்குக் கிடைத்திருக்கின்றது. கிழக்கு சர்வ தேச சங்கம் என்ற அமைப்பைக்காண, ருஷியாவும் பாரசீகமும் துருக்கியும் எண்ணங் கொண்டிருப்பதாகத் தோன்றுகின்றது. கிழக்கு சர்வதேச சங்கத்தின்—அது நிறுவப்பெற்றால்—உறுப்பின் இலட்சணம் யாது? இந்தியாவை யொத்த அடிமை நாட்டுக்கு உறுப்பாக உரிமையுண்டா என்பது இன்னும் விளக்கமாகவில்லை. இது சம்பந்தமாக, ருஷியாவும் துருக்கியும் முன்னணியில் நின்று துரிதமாக வேலை செய்து வருவதாகக் காணப்படுகின்றது. "துருக்கிக்கும் ருஷியாவுக்கும் இடையேயுள்ள உறவு நேசப்பான்மை கொண்டது மட்டுமல்ல, சகோதரத்தன்மையும்கொண்டதாகும்" என்று சமீப காலத்துக்கு முன், ருஷ்டி பாட்சாவினுல் கூறப்பட்டது. இத்தகைய அறிக்கையைக்காண, நமக்கு வியப்புத்தான்; ஏனெனில், பண்டைக்காலத்தில், ருஷிய ஜார்களுக்கும் துருக்கி சுல்தான்களுக்கும் இடையே இருந்த மனப்பான்மையை எவரும் விரைவில் மறந்திருக்க முடியாது.

கிழக்கு சர்வ தேச சங்கம்தோன்றி எழுமாகில், உலக நாடுகள் இரு கூறுகளாகப் பிரிந்துவிடும். எனவே, இரண்டு சங்கங்கள் இருக்கும். ஒன்றில் ஐரோப்பியப் பெரும்பான்மையும் மற்றென்றில் ஆசியப்பெரும்பான்மையும் இருக்கும். ஒருக்கால், இவ்விரண்டு அமைப்புகளினின்றும், அமெரிக்கா ஒதுங்கி நிற்கலாம். ஏற்கனவே உயிர்த்தெழுந்து நிற்கும் அகில ஆசியச் சங்கத்தையும் நாம் நமது கவனத்திற்கொள்ளவேண்டும். அகில ஆசியச் சங்கத்தைக் கண்டவர்கள் கிழக்கு சர்வதேச சங்கத்தைக்காண முயலுபவர்களுடன் ஒத்துழைப்பார்களோ என்பது தெரியாது. கீழ் நாடுகள் சம்பந்தப்பட்டவரையில், ஒரே ஒரு அமைப்பு இருப்பது விரும்பத்தக்கது. அதன் மூலமாக ஆசிய நாட்டார்கள் தத்தம் குறைபாடுகளை எடுத்துச் சொல்லலாம். சிறிய நாடுகளும் அடிமை நாடுகளும் இந்த அமைப்புகளினின்றும் விலக்கப்பட்டு, தங்கள் சொந்த நலத்தின் பொருட்டு, பெரிய நாடுகளும் சுதந்திரங் கொண்ட நாடுகளும் கிழக்கு சர்வதேச சங்கமாகச் சேர்ந்து கொண்டால், அது ஆசியாவுக்குத் துர்ப்பாக்கியம் தான். உலக சமாதானத்தை நாடி, அதை நிலைக்க வைப்பது தங்களுடைய நோக்கங்களில் ஒன்று என்று அகில ஆசியச் சங்கத்தார் ஏற்கனவே கூறியுள்ளார்கள். எனவே, நேர்மை கொண்ட மார்க்கத்தில் நிற்பவர்கள் யாவரும் இந்த சங்கத்தை அபிமானித்து ஆதரிக்க வேண்டியது அவசியமாகின்றது. யோசனையிலிருந்துவரும் கிழக்கு சர்வ தேச சங்கத்தின் நோக்கங்கள் யாவை என்று இன்னும் நமக்குத் தெரியாது. ஆசியா நாட்டில், கிழக்கு சர்வதேசசங்கம் என்ற பெயருள்ள ஒரு அமைப்பும் அகில ஆசியா சங்கம் என்ற பெயர்கொண்ட மற்றொரு தனி அமைப்பும் இருப்பது பயன்படாது. ஐரோப்பியர்கள் ஆசியாவில் புகுந்து, செய்யும் அதிக்கிரமங்களைத் தடுப்பதற்கு, ஆசியாவிலுள்ள நாடுகள் அனைத்தும் ஒரே ஒரு அமைப்பில் சேர்ந்து உழைப்பது தேவையாகும். அந்த அமைப்பு அகில ஆசியாச் சங்கம் என்று பெயர் படைத்தாலும் கிழக்கு சர்வதேச சங்கம் என்ற நாமம் கொண்டாலும் பாதகமில்லை. இப்பொழுதிருக்கும் சர்வதேச சங்கமும் இனித் தோன்றும் கிழக்கு சர்வதேசச் சங்கமும் முட்டிக்கொண்டு, உலக சமாதானம் சீர்குலையப் பெறும் என்று சிலர் அச்சங் கொள்ளுகின்றார்கள். இரண்டு சங்கங்கள் வேண்டுமா அல்லது மூன்று வேண்டுமா என்பதே இன்னும் உறுதிப்படவில்லை. சர்வதேச சங்கம் தோன்றி, உலகப்படைகளைக் குறைப்பது என்று முயற்சிகள் பல செய்யப்பெற்றும் உலகப்போர் என்ற அச்சம் முன்னிருந்த நிலையிலேயே இருக்கின்றது. எதிர் காலத்தில் போர் நிகழாது என்று உறுதி கூற, இப்பொழுதிருக்கும் சங்கத்தால் முடியவில்லை. உலக சமாதானத்தையும் கொணர, அதனுல் சாத்தியப்படவில்லை. படைகளைக் குறைக்கவேண்டுமென, சர்வதேசசங்கம் எவ்வளவோ முயற்சி செய்தபோதிலும், அதன் உறுப்புகள் யாவும் தங்கள் சேனையையும் கடற்படையையும் பெருக்கிக்கொள்ளுவதில் நாட்டம் கொண்டிருக்கின்றன. எனவே, கிழக்கு சர்வதேச சங்கம் தோன்றுவதால், உலகப் போர் நிகழும் என்று அச்சம் கொள்ளுவதில் பயனில்லை. ஆசியா நாட்டார்கள் சர்வதேச சங்கத்தின் நடவடிக்கைகளைக் கண்டு, மனச்சோர்வு உற்றுவிட்டனர். அவர்களுக்குச் சொந்தமான அமைப்பு ஒன்று தேவை. ஆசியாவில், தனித்த பல சங்கங்கள் இருப்பது பயன்படாது. கிழக்கு சர்வதேச சங்கம் என்று ஒரு அமைப்பு இருந்தால் போதும். அதில் ஆசியா நாடுகள் அனைத்தும்—அவைகள் எவ்வகை நிலையிலிருந்தபோதிலும் சரியே—ஒன்று சேர்ந்து உழைக்கவேண்டும்.

## யாருக்கு இலாபம்?

ஸர். பேஸில் பிளாக்கெட் (இந்தியாவின் பொக்கிஷ மந்திரி) :—நாணயமாற்றில், ஒரு ரூபாய் ஒன்றுக்குப் பதினெட்டு பென்ஸ் அதாவது ஒரு சவானுக்கு ரூபாய் பதின்மூன்று சொச்சம் என்று நான் செய்ய முயலுவதில் எவ்வளவு இலாபம் இந்தியாவுக்கு உண்டாகும்? சவரன் மலிவாகும். ஆங்கில நாட்டுச் சாமான்களைக் குறைந்தவிலை கொடுத்து வாங்கலாம். இந்தியாவுக்கு ஆங்கிலநாட்டிலிருந்து வாராத சாமான்கள் பாக்கி யுண்டா? ஏன் இந்திய அரசியல் வாதிகள் என்னுடைய யோசனைக்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்கின்றனரோ, தெரியவில்லை.

இந்தியவரி செலுத்துவோன் :—நாங்கள் ஆங்கிலநாட்டில் சாமான்கள் வாங்குகிறவரையில், தங்கள் ஏற்பாட்டினுல் இந்தியாவுக்கு இலாபம் தான். ஆனல் ஆங்கில நாட்டுக்கு நாங்கள் சாமான்களை விற்றால், எங்களுக்கு எவ்வளவு நஷ்டம்? ஆங்கில நாட்டில் கைத்தொழில் சாமான்கள்விலையாகாமல் தேங்கிக்கிடக்கின்றனவோ?

## சிறுவர் பகுதி.

ஆதி புராணர் ஒருநாட் காலையில், விடிவதற்கு வெகு நேர முன்னரே, எழுந்திருந்து குளிர்காற்றில் நெடுந்தூரம் நடந்து உடம்பு சோர்ந்துபோகும் நிலைமையில் வீட்டுக்குவந்து சேர்ந்தார். பாட்டனர் தங்களிடம் பேசாததுகண்டு, அவர்கள் வருந்திக்கொண்டிருந்தார்கள். ஆனல் தங்கள் வருத்தத்தை அவர்கள் வாய்விட்டுச் சொல்லவில்லை, சொல்லவும் கூடவில்லை.

ஆதிபுராணரின் மௌன விரதம் முற்றுப்பெற்றதெனக் கண்டுகொண்ட குழந்தைகள் அவரைக் கேள்விகள் கேட்கத் தலைப்பட்டனர். "இவ்வளவு காலமாகத் தாங்கள் என் எங்களிடம் பேசவில்லை? நாங்கள் என்ன தப்பிதம் செய்தோம்" என்று உமை கேட்டாள். முருகன் அப்பொழுதும் வாய் பேசாமலிருந்தான். "நீ யாதொரு கேள்வியும் கேட்கவில்லையா, முருகா" என்று பாட்டனர் வினவினர். இல்லை என்றான் முருகன். "அச்சத்தால் கேட்காமலிருக்கவேண்டாம்; சந்தேகமிருந்தால், அல்லது நான் செய்தது தப்பிதம் என்று உனக்குத் தோன்றினல், நீ தாராளமாகக் கேள்விகளைக் கேட்கலாம்" என்று ஆதி புராணர் முகமலர்ச்சியுடன் கூறினர். "தாங்கள் செய்த காரியம் சரியாகத்தான் இருக்கவேண்டும் என்ற நம்பிக்கை என்னிடம் இருப்பதால், எனக்குச் சந்தேகமே தோன்றியதில்லை. இப்பொழுது கேள்வி கேட்கவும் எனக்குத் தோன்றவில்லை" என்றான் முருகன்.

ஆதிபுராணர் கூறுகின்றார்:— "உமை! நீ கேட்ட கேள்வி சரியானது. முருகா! நீ கேள்வி கேட்காமலிருப்பது சரி. முதலில் கேட்ட கேள்விக்கு பதில் சொல்லிவிடுகின்றேன். சில நாட்களில் திரளாக மேகங்கள் சூரியனை மூடிக்கொள்ளுகின்றன. அது யாருடைய தவறு? அது சூரியனுடைய தவறு ஆகும். தன்னுடைய வெப்பத்தினல் கடல்நீரை ஆவியாக்கி விடுகின்றது. ஆவி, மேகமாக வானத்தில் படர்கின்றது. அத்தகைய மேகங்கள் சூரியனை மறைத்துக் கொள்ளாவிட்டால், பயிர்கள் மழையின்மையால், வாடி வதங்கிச் செத்துவிடும். இந்த வீட்டுக்கு நான் சூரியன். என்னுடைய அகங்காரம் என்ற வெப்பத்தினல், நான் கொடுங்கோலனகி விட்டேன். அந்த மனப்பான்மை வந்துவிடவே, உங்களுடைய அன்பு என்ற தண்ணமுதை நான் சிறிது காலத்துக்கு நுகரலாகாது என்ற தண்டனையை எனக்கு விதித்துக்கொண்டேன். அந்த தண்டனை எனக்குப் போதும். இனி அந்த மனப்பான்மை எனக்கு வராது என்று நினைக்கின்றேன். உமை கேள்வி கேட்டது சரி என்றேன். ஏனெனின்—"

"கேள்வி கெட்டது தவறு" என்றான் முருகன்.

ஆதிபுராணர் கூறுகின்றார்:— "முருகா! அவசரப்படாதே. நீயும் உமையும் இந்தவீட்டில் சேர்ந்து வளர்ந்து வந்தாலும், உங்கள் இனம் வெவ்வேறு. உமை பெண் என்று நான் உனக்குச் சொல்லவும் வேண்டுமோ? அவளுடைய இனத்துக்குத்தக்க மனப்பான்மையை அவள் காட்டி விட்டாள். ஆண் இனத்துக்குத்தக்க மனப் பான்மையை நீ காட்டிவிட்டாய்."

"தாங்கள் சொல்லுவது விளங்கவில்லையே" என்று இருவரும் ஒருமிக்கக் கூறினர்கள்.

"கேளுங்கள். பெண்களின் உள்ளம் அன்பு நிறைந்த உள்ளம். அன்பு என்ற மழைத்துளிகளால் வளர்ந்து வருகின்றார்கள் பெண்கள். வைராக்கியம் என்ற வச்சிராயுதத்தைத்துணைக் கொண்டு ஆண்கள் வாழ்கின்றார்கள். பாட்டனரின் அன்புக்குப் பாத்திரமாகாத முறையில், தான் என்ன தவறு செய்தாளோவென்று உமை வருந்தி, அந்தக்கேள்வியைக் கேட்டாள். வைராக்கியத்தன்மை கொண்ட ஆண் நீ ஆதலின், நான்செய்தது சரியாகத் தானிருக்கவேண்டும் என நம்பிக்கை கொண்டு, நீ வாய் பேசாமலிருந்தாய், முருகா. அதனலே தான், நீங்கள் இருவரும் செய்தது சரி என்று நான் சொன்னேன். விளங்குகின்றதா" என்றார் ஆதி புராணர்.

முருகன் தலையை அசைத்து, "ஆம்" என்றான். உமை, யோசிக்கவேண்டுமென்றாள்.

## விடுதலையின் விலை.

("இளமை இந்தியா" வில காணப்படுவது.)

பதின்மூன்று அமெரிக்கநாடுகளும் தமது விடுதலையின் பொருட்டு, ஆங்கில நாட்டை எதிர்த்து, ௧எஎசும் ஆண்டு டிசம்பர்மீ புரட்சிப்போர் செய்தன. அந்தப் போரில் சேனபதி ஜியார்ஜ் வாஷிங்டன் அவர்களுடைய அமெரிக்கச் சேனைக்கு, தாமஸ் பெயின் அவர்கள் எழுதியனுப்பிய பிரசங்கத்தின் கீழ்க்காணும் துணுக்குகளை திரு. கிரெக் அவர்கள் எனக்கு (மகாத்மாவுக்கு) அனுப்பியுள்ளார்:—

"இவைகள் மனிதர்களுடைய ஆன்மாக்களைச் சோதிக்கும்காலங்களாகும். கோடைச் சிப்பாயும் ஆடம்பரத் தேச பக்தனும், இந்த நெருக்கடியில், தமது தேசத்துக்குத் தொண்டுசெய்ய, அஞ்சுவார்கள். ஆனல், எவன் ஒருவன் இப்பொழுது நிமிர்ந்துநிற்கின்றானே. அவன் ஆண் பெண்களின் அன்புக்கும் வந்தனத்துக்கும் உரியவனகின்றான். கொடுங்கோல் நரகத்தைப் போன்றதாகும். அதை எளிதிலே வெல்லமுடியாது. என்றாலும், போராட்டம் எவ்வளவு கொடுமைகொண்டதோ, அவ்வளவு வெற்றியும் கீர்த்தி கொண்டதாகும் என்றஆறுதல் நமக்கு உண்டு. எதை நாம் எளிதிலே அடையப்பெறுகின்றோமோ, அதை அற்பமாக மதிக்கின்றோம்; ஒரு பொருளின் அருமையைக் கருதித்தான், அதற்கு மதிப்பு ஏற்படுகின்றது. தமது பொருள்களுக்கு என்ன விலை கூறுவதென்று கடவுளுக்குத்தான் தெரியும். தெய்வத்தன்மை பொருந்திய விடுதலையை உயர்வாகக் கொள்ளாவிடின், அது விநோதமாகத்தானிருக்கும்.........

"பிற்போக்குள்ளவர்கள் கொண்டிருக்கும் அற்ப கொள்கையைக்கண்டு, ஒருமனிதனுக்கு இருக்கவேண்டிய கோபம் யாவும் என்னிடம் ஒரு சமயம் இருந்தது. பிற்போக்குடையவர்களில் பிரபலஸ்தர் ஒருவர் சாராயக் கடை வைத்துக்கொண்டிருந்தார். அவர் தம்முடைய கடையின் வாயிற்படியில் நின்று கொண்டிருந்தார். அவருடைய அழகான குழந்தை அவருடைய கைகளில் இருந்தது. அதற்கு எட்டு அல்லது ஒன்பது வயதிருக்கலாம். உசிதமென்று தோன்றிய அளவுக்குத் தமது மனத்தை, அவர் வெளியிட்டுப் பேசினர். "எனது நாட்களில் எனக்கு அமைதியைக் கொடுங்கள்" என்றார். என்றைக்காவது ஒருநாள் அமெரிக்கா ஆங்கில நாட்டினின்றும் பிரிந்துவிட வேண்டும் என்று எண்ணாத அமெரிக்கன் இல்லை. எனவே, "துன்பம் வரின், அது எனது வாழ்நாளில் வரட்டும். எனது குழந்தை அமைதியுடன் வாழட்டும்" என்று அன்பு நிறைந்த தகப்பன் சொல்லியிருக்கவேண்டும். இந்த சிந்தனையை நன்கு உபயோகித்தால், அதுவே ஒவ்வொரு மனிதனையும் தனது கடமையை உணரச்செய்யப் போதுமானதாகும். அமெரிக்காவைப்போலக் களிப்புறக்கூடிய நாடு, உலகத்தில் வேறு எதுவுமிருக்காது. பூசல் உலகத்தினின்றும் அது இயற்கையமைப்பின் மூலமாகவே, ஒதுங்கி நிற்கின்றது. ஏனைய நாடுகளுடன் வியாபாரம் செய்வதைத்தவிர, வேறொன்றும் அமெரிக்கா செய்யவேண்டியதில்லை.

"நான் ஒரு சிலரைமட்டும் அழைக்கவில்லை; நான் எல்லோரையும் கூவியழைக்கின்றேன். தனித்த ஒரு மாகாணத்தை மட்டும் நான் அழைக்கவில்லை, நான் எல்லா மாகாணங்களையும் அழைக்கின்றேன். எழுந்து நின்று, உதவிசெய்யுங்கள். சக்கரத்தில் உங்கள் தோள்களைக் கொடுங்கள். நாம் இழக்கவேண்டியது மகத்தாயிருக்கையில், நமக்குச் சிறிய சேனையிருப்பதைக் காட்டிலும், மிகப்பெரிய சேனையிருப்பது நல்லது, குளிர்காலமத்தியில், வெற்றிக்குறி இல்லாத சமயத்தில், நேர்மையையும் ஆவலையும் மட்டும் துணைக்கொண்டு, நாடும் நகரமும் ஆபத்தைக்கண்டு திகிலடைந்து, அதைச்சந்தித்து எதிர்க்க, முன்வந்தன என்று எதிர்கால உலகத்திற்குச் சொல்லப்படட்டும்! ஆயிரம் பேர்கள் போயிருக்கிறார்களே, (போதாதா) என்று சொல்லாதீர்கள். பல்லாயிரக் கணக்கில் சேர்ந்து, முன்வாருங்கள். சுமையைக் கடவுளின்பேரில் போடாதேயுங்கள்; கடவுள் உங்களை ஆசிர்வதிக்குமாறு, உங்களுடைய வேலைகளின் மூலமாய், உங்களுடைய நம்பிக்கையைக் காண்பியுங்கள். நீங்கள் எங்கு வசிக்கின்றீர்கள் என்பதைப் பற்றிக் கவலையில்லை, வாழ்வில் எத்தகைய நிலைமையில் இருக்கின்றீர்கள் என்பதைப்பற்றியும் கவலையில்லை. தீமையோ, நன்மையோ, உங்கள் யாவருக்கும் பொதுவாகும். அருகிலிருப்பவர்களும் தூரத்திலிருப்பவர்களும், ஏழைகளும் தனவந்தர்களும், ஒன்றாகக் கஷ்டமனுபவிப்பார்கள், அல்லது களிப்படைவார்கள். இப்பொழுது துடிக்காத உள்ளம் செத்துப் போய்விட்டது. நாடுமுழுதும் காப்பாற்றப்பட்டு, நாட்டார் அனைவரையும் களிப்புறச்செய்யும் சிறிய தொண்டைச் செய்யாமல் ஒதுங்கி நிற்பவனுடைய கோழைத்தனத்தைக்கண்டு, அவன் குழந்தைகளின் இரத்தம் சாபம் கொடுக்கும். துன்பத்திலும் முகமலர்ச்சி கொள்பவனை, தயரத்தினின்றும் சக்தியைச் சேகரிப்பவனை, யோசனையினல் துணிவு கொள்ளுபவனை நான் அன்புடன் பாராட்டுகின்றேன். அச்சத்தினல் சுருங்கிப்போவது, அற்பமனத்தார்களின் தொழிலாகும். ஆனல், எவனுடைய உள்ளம் உடையப்பெறாமலிருக்கின்றதோ, எவனுடைய நடத்தையை அவன் மனச்சான்று ஏற்கின்றதோ, அவன்தான் சாகும் வரையில் தனது கொள்கைகளைப்பின் பற்றிச் செல்லுவான்.

மொழிகளாலும் விரிவுடன் பேச முடியாத சந்தர்ப்பங்கள் சிலவிருக்கின்றன. அந்த சந்தர்ப்பங்களில் இதுவொன்று. தங்களைப் பயமுறுத்தும் தீமையின் முழுப்பரிமாணத்தையும் காணுத மனிதர்களும் இருக்கின்றனர். எதிரி வெற்றி பெற்றால் கருணைகாண்பிப்பான்என்றுமயக்கங்கொண்டு, ஆறுதல் கொண்டிருக்கின்றனர், நியாயம் வழங்காத மனிதர்களிடமிருந்து கருணையை எதிர் பார்ப்பது தவறும் பித்துமாகும். வெற்றி எங்கு குறியாகக் கொள்ளப் பெறுகின்றதோ அங்கு காண்பிக்கப்பெறும் கருணையும் போர்த்தந்திரமாகும், குள்ள நரியின் தந்திரம் ஓநாயின் பலாத்காரத்தைப்போலக் கொடுமை கொண்டதாகும். இரண்டினின்றும் நம்மை நாம் காத்துக் கொள்ள வேண்டும்."

(மேற் கூறிய அறிக்கையைப்பற்றி மகாத்மா கூறுவதாவது:—)

அஹிம்சைத் தொண்டர்களுக்கும் போர் வீரர்களுக்கும்இருக்கவேண்டிய தன்மைகள் எவ்வளவு ஒத்து இருக்கின்றன என்பதைக் காண ஆச்சரியமாயிருக்கின்றன. கருத்திலும் சொல்லிலும் செயலிலும் ஆமதாபாத் காங்கிரஸ் உறுதிமொழிப்படி, பூரண அஹிம்விரதம் பூண்டு, தொண்டர்களாய் ௧௯௨௧-ம் ஆண்டு காங்கிரசில் பதிவு செய்து கொண்டவர்களுக்கு, பூரண ஒற்றுமையுடன், தாமஸ் பெயின் அவர்களின் பிரசங்கம், சிறு சொல்லைக்கூட மாற்றாமல், செய்யப்பட்டிருக்கலாம். பலாத்காரத்தைக் கொண்டோ, அல்லது ஆன்ம சக்தியைக்கொண்டோ, அதாவது ஆன்மத்தியாகத்தைக் கொண்டோ, நாம் விடுதலை பெற்றாலும் சரியே, அடைந்த விடுதலை மதிக்கப் பெறும் பொருளாயிருக்கவேண்டின், அதை அதிகமான விலை கொடுத்து நாம் வாங்க வேண்டும். துணிவும் பலமான எதிர்ப்பையும் தாங்கும் பிடிவாதமும் போர் வீரனுக்குக்கு எவ்வளவு தேவையோ, சத்தியாக்கிரகிக்கும் அவைகள் அவ்வளவு தேவையாகும். பலாத்காரத்தைக் கொண்டு அல்லது சாத்வீக முறையில், சுயராஜ்யம் நாம் பெற வேண்டினலும், நாம் சுகத்தையும் சோம்பலையும் விட்டு ஒழித்தல் வேண்டும். தான் விடுதலை என்று கருதிய ஒன்றுக்காக, பிரதாபசிம்மன் வறுமையை மேற்கொண்டான். தனது விடுதலை என்று கொண்ட ஒரு குறியின் பொருட்டு, தனது உடலையும் அழிக்குமாறு, அதைப்பிறர் வயம் பிரஹலாதன் கொடுத்துவிட்டான். ஆனல், எளிதிலே சுயராஜ்யம் பெற்றுவிடலாம் என்று நம்மிடையே எண்ணிக் கொண்டிருப்பவர்கள் எண்ணத் தொலையாது. விடுதலை எளிதிலே சாத்தியமான சங்கதியல்ல என்று தாமஸ் பெயின் அவர்கள் நமக்குக்கூறுகின்றார்.

## மகளிர்கோட்டம்.

"சுதந்திர விலாஸம்" என்று ஒரு வீட்டுக்குப் பெயர். அந்த வீட்டிலிருப்போரும் யாவருக்குள்ளும் வேற்றுமையேயில்லை எனச் சொல்லலாம். வீட்டுக்கு வருமானம் தேடுபவர் மிக உயர்ந்த படிப்பாளி. வீட்டுக்கு அரசியாகிய அவருடைய மனைவியோ, மிகுந்த அடக்கமும் அன்பும் கொண்டவள்; கூரியமதிவாய்க்கப்பெற்றவள். அவர்களிடையே உலவிவந்த "கரை காணுக் காதலுக்கு" பரிசுகளாக, நான்கு குழந்தைகள் பிறந்திருக்கின்றன. கணவனும் மனைவியும் அடிக்கடி பற்பல நிகழ்ச்சிகளைப் பற்றி வாதம் செய்வதுண்டு. சூடான சொற்களும் இருதிறத்திலும் உபயோகிக்கப் படுவதுண்டு. "ஏன் இவ்வாறு ஜாலவித்தை வாதம் செய்கிறீர்கள்" என்று மனைவி அழுத்தமாக வினவுவாள். "சொல்லுவதை நேரே அறிந்துகொள்ளாமல் பேசினல், அது ஜாலவித்தை வாதமாகத்தான் உனக்குப்படும்" என்பார் கணவன். புயற்காற்றைப்போல, வாதம் நடைபெறும். இவ்வளவு வேற்றுமை உணர்ச்சி கொண்டவர்கள் எவ்வாறு ஒற்றுமையுடன் வாழக்கூடும் எனச் சந்தேகங்கொண்டு பலர் கேட்கலாம்.

மரத்திலே ஆணிவேர் இருக்கின்றது; கிளைவேர்கள் இருக்கின்றன. அடிமரம், கிளைகள், இலைகள், மலர்கள், காய்கள், கனிகள்—இருக்கின்றன. வேரும் கனியும் உருவத்திலும் தன்மையிலும் ஒன்றாமா? வேர் பார்வைக்கு மிகவும் முரடாயிருக்கின்றது. கனி பார்க்கப்பார்க்கக் கண்ணுக்கு இன்பமும் நாவுக்கு இனிப்பும் அளிக்கின்றது. கனியை எல்லோரும் மதிக்கிறார்களே என்று வேர் பொறாமை கொள்ளுவதில்லை. வேரை எவரும் போற்றுவதில்லை என்று கனி தனக்குள்ளாகவே கர்வம் கொள்ளுவதில்லை. வேருக்கும் கனிக்கும் இடையே, சூட்சுமமாக ஆனல் மிகவும் உறுதியாக, காதல் அமுதம் ஓடிக்கொண்டிருக்கின்றது. தோற்றத்திலும் தன்மையிலும் வேற்றுமையுடன் உயிர்வாழ்ந்து வளரும் வேரையும் கனியையும்போல, குடும்பத்தில் கணவனும் மனைவியும் இன்புற, இயற்கையின் இசைக்கிணங்க இல்லறம் நடத்தமுடியாதா?

விலங்குகள் இல்லறத்தை நாடுவதில்லை. அவைகளுக்கு விவேகமில்லை. விவேகத்தைப் படைத்த மனிதன் தனது மனைவி மக்களுடன் மகிழ்ச்சியுடன் கூடி, குடும்ப வாழ்வு நடத்தமுடியும். ஆனல் பெரும்பான்மையான குடும்பங்களில், அமைதியும் அன்பும் நிலவுவதில்லை. அதன் காரணங்களைத் தெரிந்துகொண்டால், இல்வாழ்வு என்ற ஒப்பற்ற இன்பத்துறையில், மனிதன் எல்லையற்ற ஆனந்தத்தை அடையமுடியும்.

இப்பொழுது உலகத்தில் இருக்கும் மனிதர்கள் யாவரும்—ஆண் பெண்கள் உள்பட, விதிவிலக்காகச் சிலரைத் தவிர—பலவீனர்கள். கோபமும் பொறாமையும் பலவீனத்தின் விளைவுகள். கோபமும் பொறாமையும் மனித உள்ளத்தில் நிறைந்து கிடக்கும் வரையில், மனிதன் சக்திப்பெருக்கு என்ற துறையில் முற்போக்கு அடையமாட்டான். "மசி" இல்லாத அச்சு, சக்கரத்தால் தேய்க்கப்படுகின்றது. தேயத்தேய, அச்சு, அச்சமடைந்து, உடைந்துபோகின்றது. அதுபோல, மனித உடலில் பொதிந்து கிடக்கும் மின்சார சக்தியைப் போன்ற அன்பு வெளித்தோன்றாத வரையிலும், கோபம் இருக்கும் வரையிலும், அந்தக் கோபம் பொறாமைக்கனலுடன் சேர்ந்துகொண்டு, உடலைத் தீய்த்து போகச்செய்துவிடும்.

---

(கல்கத்தாப் பல்கலைக்கழகத்தின் உபத்தலைவரான திரு. யாது நாத ஸர்க்கார் அவர்கள் காலஞ் சென்ற திரு. சுரேந்திர நாத பானர்ஜி அவர்களைப்பற்றி, "மாடர்ன் ரிவியூ" பத்திரிகையில் சில குறிப்புகளை வரைந்திருக்கிறார். நாட்டினிடம் தீவிரப்பற்றுக் கொண்ட தேச பக்தன் காலத்தாலும் நிலைமை மாறுபாட்டாலும் எவ்வாறு மாறுபடுகின்றான் என்பது அக்குறிப்புகளினின்றும் தெளிவாகின்றது. மேலும், ஒருதேச பக்தன் தன் காலத்தில் எவ்வளவு தொண்டு நாட்டுக்குச் செய்ய முடியும் என்பதையும் இக்கட்டுரை விளக்கிக் காட்டுகின்றது. இந்த இரண்டு முடிவுகளுக்குப் பொருத்த முள்ள குறிப்புகளை மொழி பெயர்த்து இங்கு தருகின்றோம். ப—ர். ஊழியன்)

"எனது நாட்டிற்கு எத்தகைய் உயர்ந்த தொண்டு நான் செய்யலாம்? ஜன சமூகத்தின் நலனுக்காக என்னை நான் எவ்வாறு உபயோகித்துக்கொள்ளலாம்" என்று கேட்டுக் கொள்ளும் தருணம் நேர்மையுள்ள உள்ளம்படைத்த இளைஞர்களின் வாழ் நாளில் தோன்றுவது நிச்சயம். இந்தக்கேள்விக்கு, பண்டைக் காலத்தில் வாழ்ந்த தேச பக்தர்களின் வாழ்க்கைச்சரிதத்தினின்றும் தான் விடையளிக்க முடியும்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன், எனக்கு எட்டு வயதாயிருக்கும் காலத்தில், எதிரொலிபடுமாறு, சுரேந்திரரின் பிரசங்கத்தை மண்டபத்தில் கேட்டது எனக்கு ஞாபகமிருக்கிறது. ௧௮௭௮-ம் ஆண்டில் காசியில் காங்கிரஸ் கூடிற்று. அச்சமயம் சுரேந்திரர் செய்த பிரசங்கத்தினல், நான் என் கொள்கைகளிற் பலவற்றை மாற்றிக் கொள்ள நேர்ந்தது. பிற்காலத்தில், சுரேந்திரர் தேர்தலில் தோற்றுப்போய், பொது ஜன ஊழியத்தினின்று விலகிக் கொண்ட வகையையும் நான் கண்ணுற் பார்த்தேன். தத்துவ சாஸ்திரியைப் போல, பொது ஜனத்தீர்ப்பை அமைதியுடன் சுரேந்திரர் ஏற்றுக்கொண்டு, தமது கிராம வாழ்க்கைக்கு மீண்டும் சென்றதையும் நான் பார்த்தேன்.

இளைஞர்களாயிருக்கும் உங்களிற் பலர், சுரேந்திரரின் இறுதிக் காலத்தை மட்டும் அறிவீர்கள். அவருடைய வாழ்வின் முற்பகுதியில் வங்காள இளைஞர்களுக்கு மத வெறியைப் போல, சுரேந்திரர் ஆவேசம் அளித்தது உங்களுக்குத் தெரியாமலிருக்கலாம்; அல்லது மறந்து போயிருக்கலாம். சென்ற நூற்றாண்டின் இறுதிப்பகுதியில், சுரேந்திரர் வெற்றி பெற்ற சேனபதியைப் போல, இந்தியாவின் ஐக்கிய மாகாணங்களில் சுற்றுப்பிரயாணம் செய்ததை நீங்கள் மறந்திருக்கலாம். சுரேந்திரர் "முடிசூடா மன்னன்" என்று விளங்கிய காலம் இருந்ததாகவே, நீங்கள் கருதாமலிருக்கலாம். அவர் புரட்சிக்காரர் என்று கருதப்பட்டகாலமுமுண்டு. இளமைப்பருவத்தில் அவர் தீவிரக்கட்சியைச் சார்ந்தவர் என்று பிற்போக்குக் கொண்டவர்களால் கருதப்பட்டார். அவருடைய முதுமைப் பருவத்தில், அவர் பிற்போக்குக் கொண்டவர் என்று இளைஞர்களால் கருதப்படுகின்றார். இதன் பொருள் என்ன? அவர் உண்மையான தேச பக்தர் என்றும் முரணில்லாமல் தமது வாழ்க்கையை நடத்தினர்என்றும் இதனல் கொள்ளக்கிடக்கின்றது. இந்தியர்கள் அவரைப் போற்றுகையிலும், அவரைத் தூற்றுகையிலும் அவர் ஒரே இலட்சியத்தைக் குறிக்கொண்டு உழைத்து வந்தார் என்பது தெளிவாகின்றது. அவருடைய வாழ்க்கையைப்பற்றி எனக்குச் சிறிது தெரியும். அவர் கண்ட கல்லூரியில் நான் ஆச்சாரியனக அமர்ந்திருந்தேன். அவ

## சுரேந்திர நாத பானர்ஜி.

ரை நெருக்கமுடன் அறியாத உங்களுக்கு, அவருடைய வாழ்க்கையைப் பற்றி சில குறிப்புகளைத்தருகின்றேன். ஏனெனின், நமது இளைஞர்களுக்கு ஆவேசம் தரக்கூடிய தன்மைகள் பல அவருடைய வாழ்க்கையில் செழித்து நிற்கின்றன.

அவருடைய வாழ்க்கையில் சிறப்பாக முதன்முதலாக காணப்படுவது, அவருடைய எல்லையற்றதுணிவாகும். எந்தக்காரியத்தையும் செய்து முடித்துவிடலாம் என்ற எண்ணம் அவரது வாழ்க்கைக்கு ஊன்றுகோலாகவிருந்தது. சுரேந்திரநாதர் இளமைப் பருவத்திலிருக்கையில், நமது நாட்டின் அரசியல் கிளர்ச்சி எவ்வளவு கேவலமான நிலையில் இருந்தது என்பது உங்களுக்கு இப்பொழுது தெரியாது. அப்பொழுது ஒரே ஒருபொது அமைப்புத்தானிருந்தது. அதற்கு பிரிட்டிஷ் இந்தியச்சங்கம் என்று பெயர். அது தனவந்தர்களின் சபை. அது ஒரு வேலையும் செய்யாமல், தூங்கிக்கொண்டிருக்கும். பொதுக் கூட்டங்களைப் "போட" முடியாது. பெருமுயற்சி செய்தாலொழிய, சிலர் கூட பிரசங்கத்துக்கு வரமாட்டார்கள். இந்தியர்களுக்குச் சொந்தமாக, ஆங்கிலத்திலாவது, தாய்மொழியிலாவது, தினசரிப்பத்திரிகை இல்லை. வாரப்பத்திரிகையுமில்லை. நமது சட்டசபையில் தெரிந்தெடுக்கப்பெற்ற அங்கத்தினர் ஒருவர்கூட இல்லை. ஆங்கில நாட்டில் நம்மிடம் அனுதாபம் கொண்டவர்கள் இரண்டொருவர் இருந்திருக்கலாம். இந்தியாவின் ஏனைய மாகாணங்களின் நிலைமை இன்னும் கேவலமாகவிருந்தது. காங்கிரஸ் அப்பொழுது தோன்றவில்லை. இந்தியாவுக்குப் பொதுவான அமைப்பு ஒன்றுமேயில்லை. நமது ஜனங்களை ஒன்று சேர்க்க, பசுப்பாதுகாப்பு மகாநாடுகூடக் கிடையாது. பூமி நூலில், இந்தியா ஒரு நாடாக விளங்கிற்று. அவ்வளவுதான். இந்தியர்களிடம் அப்பொழுது சமூக சமுதாய உணர்ச்சி அறவே இல்லை. கிழக்கு இந்தியக்கம்பெனியின் ஆளுகையிலிருந்ததைப் போலவே, மத்திய அரசாங்கத்தார் அரசியல் அதிகாரம்னைத்தையும் தங்கள் வயம் வைத்துக்கொண்டிருந்தார்கள். பொதுஜனத் தேர்தல், சுயாட்சி, பொதுஜன அபிப்பிராயத்தை மதித்தல், இந்திய நலத்துக்கான பிரதிநிதித்துவம்— இவைகளில் எதுவும் கனவிற்கூட காணப்பெறவில்லை.

இத்தகைய நாட்டில், இத்தகைய் சந்தர்ப்பங்களுக்கிடையே, சுரேந்திரர், நாட்டின் முற்போக்குக்காக உழைக்கத் தலைப்பட்டார். அவர் சொற்களை அப்பொழுது எவரும் மதிக்கவில்லை. நாட்டார்கள் அவரைக் கேலிசெய்து நகைத்தார்கள். வங்காளக் கவியாகிய இந்திரநாத பானர்ஜி அவர்கள் சுரேந்திரரை ஏளனம் செய்து கவிபாடினர். ஆனல் சுரேந்திரர் நெஞ்சம் தளரவில்லை. ஆண்டுதோறும், தோல்வி என்று கருதப்பெற்ற போராட்டத்தில் அவர் ஈடுபட்டுக் கிடந்தார். பயனில்லை என்று தோன்றின போதிலும், அவர் பிரசங்கம் செய்துவந்தார்; உழைத்துவந்தார். இவ்வாறு முப்பது ஆண்டுகள் கழிந்தன. மூட்டங்கொண்டிருந்த மேகங்கள் கலையத்துவங்கின. ஆனல் உடனே, வங்காளப் பிரிவினையும் வந்து தோன்றிற்று. வங்காளத்தின் சரித்திரத்தின் இந்த நெருக்கடி காலத்தில், சுரேந்திரர் எவ்வாறு நடந்து கொண்டார்? அவருக்கு அப்பொழுது ௬௰ வயது இருக்கும். ஸர்க்கார் உத்தியோகஸ்தர்கள் உபகாரச் சம்பளம் பெற்று, பொறுப்பினின்றும் விலகிக்கொள்ளும் வயது. சுகத்தையும், தமது உடல் நலனையும், மன அமைதியையும் அவர் நாடி, இளைஞர் களிடம் தேசத்தொண்டை விட்டுவிட்டாரா? அவ்வாறு, அவர் செய்திருந்தாலும், அதைக் குறைகூறுதல் எவருக்கும் தகாது. இல்லை. அவர் போராட்டத்தில் எதையும் இலட்சியம் செய்யாமல் பாய்ந்தார். அவருடைய இளமையிற்கூட, அவர் இத்தகைய உற்சாகத்தைக் காண்பிக்கவில்லை. அவர் "வங்காளத்தின் முடிசூடா மன்னர்" ஆனர். அந்தப் போராட்டத்தை வெற்றியுடன் முடித்தார்.

பல ஆண்டுகள் கழிந்தன. வேறு நிலைமை ஏற்பட்டது. ஜனங்களால் தெரிந்தெடுக்கப்பெற்ற சட்டசபை அவரை மந்திரியாக ஏற்றது. அப்பொழுதும் அதை அவர் மறுக்கவில்லை. "எதிர்ப்பிலிருக்கும் கட்சியாருக்கு மந்திரிப் பொறுப்பு வருமாகில், அதை அவர்கள் ஏற்றுக்கொள்ளுவார்கள்" என்ற வழக்கம் ஆங்கில நாட்டில் உண்டு. மந்திரிப்பதவியை ஏற்றுக்கொண்ட சுரேந்திரருக்கு, அவரது வாழ்க்கையின் துயரம் துவங்கிற்று.

மாண்டேகு செம்ஸ் போர்டு சீர்திருத்தங்கள் நாட்டில் வேரூன்றவில்லை. நாட்டில் கலக்கமதிகமாயிருந்தது. பொறுப்புள்ள சுயராஜ்யம் நாட்டு மக்கள் வேண்டினர்கள். அது கிடைக்கப்பெறவில்லை. சீர்திருத்தங்கள்தாம் கிடைத்தன. சுரேந்திரர் மந்திரியாயிருந்த மூன்று ஆண்டுகளிலும், அவர் கலக்க அலைகளுக்கு இடையே, இடைவிடாது நீந்திவந்தார். இரண்டாவது தேர்தலில் அவர் தமது ஸ்தானத்தை இழந்தார். முணுமுணுக்கவில்லை. ஓய்வுக்குச் சென்றார். ஓய்வு எடுத்துக்கொள்ளவேண்டியது சரியாகும்.

சுரேந்திரரின் இப்பகுதி வாழ்க்கையைப்பற்றிப் பலர் பல சுடுசொற்கள் கூறியுள்ளார்கள். ஆனல் எதிர்காலச் சரித்திரம் சுரேந்திரரைக் கண்டித்து எழுதாது என்பது திண்ணம். அரசியல் உலகின் நிகழ்ச்சிகளை அளப்பதற்கு, பக்குவம் பெற்ற அளவுக்கருவி இவ்வுலகத்தில் இருக்க முடியாது. உயர்ந்த இலட்சியத்தைக் குறிக்கொண்டு, உத்தம கருமம் செய்ய இயலாதவர்கள், இரண்டாம்தர கருமத்தையேனும் செய்யவேண்டும். அல்லாமல் நிகழ்ச்சிகளை குழம்பிக்கொண்டே போகவிடுதல் தவறாகும்.

பெரும்பதவிக்கு வருமுன்னர், பெரியார்கள் தங்களைப் பக்குவப்படுத்திக் கொள்ளுவார்கள். தேசத்தொண்டு செய்ய ஆவல்உள்ளவர்களும்தங்களைச் சீர்படுத்திக்கொண்டு, தேசத் தொண்டில் இறங்கவேண்டிய தேவையை உணரவேண்டும். சுரேந்திரர் பிறப்பு முதற்கொண்டே, அரிய பிரசங்கியல்லர். அரசியல் சம்பந்தமான இலக்கியத்திலும் அவருக்குப் பயிற்சிபோதாது. அவருக்கு நடுத்தர வயது வந்தபிறகு, அவர் அரசியல் கிளர்ச்சியில் கலந்துகொண்டார். ஐரோப்பிய நாடுகளின் பிரசங்கிகளின் பிரசங்கங்களைக் கவனத்துடன் அவர் படித்தார். பத்திரிகைகளைப் படித்தார்; அரசாங்க தஸ்தாவேஜுகளில் ஈடுபட்டு, வாசித்து வந்தார். தம்முடைய ஞாபக சக்தியை பெருகியும் வளர்த்துக்கொண்டார். இந்தத் துறையில் பயிற்சி [illegible] பெற்ற பின்னரே, அவர் பிரசங்கம் செய்யத் துவக்கினர். பிரசங்கியின் [illegible] எளிது என்றும் பிரசங்கி [illegible] களும் மாலைகளும் [illegible] றும் சட்டசபைப் பதவியும் [illegible] தலைமைப் பதவியும் வரும் என்றும் என்னும் இளைஞர்கள், இத்தகைய பரிசுகள் வருமுன்னர் [illegible] மை எவ்வாறு திருத்திக்கொண்டார் என்று தெரிந்து கொள்ள வேண்டும். தொண்டை கெட்டியாயிருப்பதனலே, தேசத் தொண்டு செய்து விடலாம் என்று [illegible] நமது நாட்டிற்கு அவமானமாகும்.

சுரேந்திரர் தமது [illegible] முழுதும் ஒழுங்கான உழைப்பையும் [illegible] பழக்கங்களையும் கைக்கொண்டிருந்தார். நான் கல்லூரி போதகனயிருக்கையில், சுரேந்திரரின் உழைப்பைக்கண்டு வியப்பும் வெட்கமும் கொண்டேன். அவர் வயது சென்றவர். அவர் அரசியல் வாதி. என்றாலும் இரண்டு பள்ளிகளையும் ஒரு கல்லூரியையும் செவ்வனே நடத்தி, நிர்வாகம் செய்து வந்தார். பள்ளிக்கூடத் [illegible] அமைப்பார். [illegible] குறிப்பிடுவார். [illegible] புத்தகங்களைப் பரிசோதித்துப் பார்ப்பார். தமக்குக் கீழிருப்பவர்களின் [illegible] வேலையை மேற்பார்ப்பார். இவ்வளவு செய்தபோதிலும், [illegible] மாலை நடைப் [illegible]. தமக்கு வழக்கமாயுள்ள ஓய்வையும் எடுத்துக்கொள்ளாமலிருப்பதில்லை. அவருடைய உணவும் உறக்கமும் நன்கு ஒழுங்குபடுத்தப் பட்டிருந்தன. கடிகாரயந்திரத்தின் ஒழுங்கைப்போல, அவருடைய வாழ்வு நடைபெற்று வந்தது. இவ்வாறு அவர் எழுபத் தேழு ஆண்டுகள் வாழ்ந்தார். பல துறைகளிலும் பாடுபட்டு உழைத்து வந்தார். அவருடைய [illegible] யாருடைய தொண்டும் ஒப்பு [illegible] இல்லை. அவருடைய [illegible] எதுவும் நாய்க்கொடைத்தன்மை [illegible] ண்டதல்ல. அவருடைய [illegible] மினுமினுப்பில்லை. அவருடைய வேலை என்றைக்கும் நிலைத்து நிற்கும். அவர் இளவங்காளத்தின் அரசியல் [illegible] வார். நமது காலத்தில் தோன்றிய பல தலைவர்கள் சீர்கெட்டு, அக்கால [illegible] ணம் எய்தப்பெற்றனர்.

அவரது வாழ்க்கையின் சிறப்பான ஒரு தன்மையை உங்களுக்கு [illegible] றுத்த நான் எண்ணுகின்றேன். அவருடைய தீவிரமான தேசபக்தியும் சோர்வில்லாத உழைப்பும் ஒருபுறமிருக்க, அவருடைய எளிய வாழ்க்கையையும் நடை நயத்தையும் தான் இளைஞர்களுக்குச் சான்றாகக் காண்பிக்கவேண்டும். அடக்கம் அடிமைத்தனம் என்று இக்காலத்தில் போதிக்கப்பட்டு வருகின்றது. இந்த [illegible] பார்த்தால், சுரேந்திரரின் வாழ்க்கை தவறான முறையில் நடைபெற்றது எனக் கூறுதல் வேண்டும்.

---

கனத்த உடம்பைத்தாங்கிய ஒரு களவான் புதிதாக, ஒரு [illegible] ஊருக்குப் போனர். ரயில்வண்டியைவிட்டு இறங்கி, இங்கும் அங்கும் போனர். இருட்டுகோம். அதோடுகூட சிறிய ஸ்டேஷன். வெளியே போகும்வழி தெரியவில்லை. சமீபத்தில் மனிதர்களும் எவரையும் காணேம். ஒரு சிறு பையன் கம்பிக்கு வெளியில் நிற்கக் கண்டார்.

"என்ன இழவு ஊர் இது! பையா! வெளியில் எப்படிப் போகலாம்."

சிறுவன் களவானைக் கொஞ்சம் ஏற இறங்கப்பார்த்துவிட்டு, ஒன்றிரண்டு கஜ தூரம் எட்டிச்சென்று, "அந்த கோடிவழியாய் போய்ப்பார்க்கிறது தானே" என்றான்.

## முஸ்ஸோலினி.

'மாடர்ன் ரிவ்யூ' பத்திரிகை எழுதுவது வருமாறு:—

அரசியல், பொருளாதாரம் இவற்றின் நிலைமையை ஆராய்ச்சி செய்துவரும் ஓர் அமெரிக்க ஆராய்ச்சியாளர், சமீபத்தில் முஸ்ஸோலினியை ஒரு மேதாவி என்று வருணித்து, சொல்லியதாவது:—"நிபுணர்கள் அநேகமாக பணத்திடம் வெறுப்புக்கொள்ளுகின்றார்கள்; பணத்தைப்பற்றிக் கருத அவர்களுக்கு நேரமில்லை. அவ்வளவு தீவிரமாய் நிபுணர்கள் தமக்கெனத் தேர்ந்துகொண்ட வேலையில் ஈடுபடுகின்றார்கள். மேதாவித்தன்மை என்பது இனம் இனமாகக் கவனிக்கக்கூடிய அளவிறந்த சக்தி என்றால், முஸ்ஸோலினி ஓர் மேதாவி." இப்பெரிய இத்தாலியரது உழைப்பு சக்தி விசேஷமானது. ஆறு மந்திரிகளின் வேலைகளை அவர் பார்க்கிறார். சம்பளம் ௬௦௦ ஸ்டர்லிங்குகள் அதாவது ஏறக்குறைய ௧௨,௦௦௦ ரூபாயும் தம் செலவுகளும் பெறுகிறார். இன்று தினம் அவர் இதாலியில் ஓர் ஏழை மனிதனாக இருக்கிறார். இதாலியின் தொண்டிலேயே அவர் ஈடுபட்டிருக்கிறார்.

ரோமிலிருந்து ௧௯௨௬-ம் ஆண்டு ஆகஸ்டு-மீ ௪-ந் தேதி வந்துள்ள கீழ்வரும் செய்தி, பாஸிஸ்டு சட்ட அமைப்புத் திட்டங்களைப்பற்றி மிகுதியும் விளக்குகின்றது. (அச்செய்தி வருமாறு:—)

ரோம், ஆகஸ்டு ௪ (எபி)

மந்திரி சபை இன்று தினம் பிரதம மந்திரி திரு. முஸ்ஸோலினியின் தலைமையின் கீழ் சட்ட சபையும் நிர்வாக சபையும் என்ற முறையில் நடைபெற்று, சாதாரணச் சட்டசபை யொன்ற ஒரு மசோதாவைப்பற்றி வாதித்து நிறைவேற்ற எந்நேரம் செல்லுமோ அந்நேரத்திற்குள், ஐம்பத்தைந்து சட்டங்களை அங்கீகாரம் செய்தது.

கூட்டங்களில் மூன்றாவது கூட்டம் மூன்றரைமணி நேரம் நடந்தது. அரசாங்கத்தின் நிர்வாக காரியங்களைப் பாதிக்கும் எவ்விஷயத்தையும் பற்றிய நூற்றுக்கு மேற்பட்ட நடவடிக்கைகள் தீர்மானிக்கப்பெற்றன. இந் நடவடிக்கைகள் உடனே அமுலுக்கு வரும். சட்ட சபையின் அடுத்த கூட்டம் சம்பிரதாயத்திற்காக மாத்திரம் அவற்றை அங்கீகாரம் செய்யும்.

இன்று தினத்திய புதிய சட்டங்களில், பாஸிஸ்டு அரசாங்கம் சம்பந்தப்பட்டவரையில் மிகமுக்கியமானது பொதுஜனக் கல்வியைப்பற்றிய சட்டமாகும். "இதாலிய நாட்டின் மீது தன் முக்கியத்தை எப்பொழுதும் அதிகரிப்பதற்காக, கவர்ன்மெண்ட் கொண்டிருக்கும் திட்டத்தை அனுசரித்து" ௩௫,௦௦௦ நாட்டுப்புறக் கலாசாலைகள்கட்டவும், அங்ஙனமே அநேக இரண்டாந்தரக் கலாசாலைகள் (ஸெகண்டரி ஸ்கூல்கள்) அமைக்கவும் உத்திரவிடப்பெற்றிருக்கிறது.

ஆகாய விமானங்கள் ஓட்டுவது சம்பந்தமான இயந்திர முறைக் கலாசாலை யொன்று விசேஷமாய் அமைக்கப்படவிருக்கிறது. சித்திரக்கலைப் பயிற்சிகளை கலை அறிஞர் மேற்பார்வை பார்க்கத்தக்கதான ஒரு முறையும் ஏற்படுத்தப்படப் போகிறது. இதாலி முழுவதும் வாசகசாலைகளைப் புதிதாய் ஒழுங்குவிக்க ஒரு மத்திய வாசகசாலைக் கமிஷன் அமைக்கப்பட்டிருக்கிறது.

புதிய காட்டிலாக்காவும் ஒன்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதற்கு இன்ஸ்பெக்டர் ஜெனரலாக ஜெனரல் ஸெப்பி போரியானி என்பவர் நியமிக்கப்பெற்றிருக்கிறார். வியாபார ஆகாயப்போக்கு வரத்தையும் விரிவு படுத்த ஏற்பாடாயிருக்கிறது. தூரின், பேவியா, வெனிஸ், டிரைஸ் இவைகளுக்கும் வியன்னாவுக்கும் போக்குவரத்துக்கு ஏற்பாடாயிருக்கிறது.

மீன்களை வியாபாரம் செய்வதை ஒழுங்குபடுத்தவும் குதிரைவளர்ப்பைச் சீர்திருத்துவதற்கான ஒரு தேசியக் கமிட்டியை நியமிக்கவுமான ஒரு பரிட்சார்த்தத்திட்டம், நிறைவேற்றப்பட்ட பொருளாதாரச் சட்டங்களில் ஒன்றாகும். தேசியச் சிறுதொழில்களது அபிவிருத்திக்காக ௨,௦௦,௦௦௦ லீர்கள் (ஒருலீர் ஏறக்குறைய ௩ அணாவுக்கு சமம்) உதவி தனம் ஆண்டு தோறும் அளிக்க அனுமதிக்கப்பட்டது. ௬,௦௦,௦௦௦ லீர்கள் மூலதனம் வைத்து, சிறுதொழிற்பொருள் ஏற்றுமதி ஸ்தாபனம் ஒன்றும், ௫௪,௦௦,௦௦௦ முதல் வைத்து, அதே காரியத்திற்கான நிதி ஒன்றும் மறுபடி ஸ்தாபிக்கப் பெற்றன.

## முன்னும் பின்னும்.

நாம் இப்பொழுது குழந்தைகளை வளர்க்கும் முறை மிகவும் விநோதமானது; கேவலமானது என்று எழுத எனக்குக் கூச்சமாயிருக்கிறது. நாம் நமது குழந்தைகளுக்குக் கொடுக்கும் படிப்பு, இளமையில் அவர்களைக் கல்லாகவும் முதுமையில் மண்ணாகவும் செய்துவிடுகின்றது. "இன்றையக் குழந்தை நாளை மனிதன்" என்று ஆங்கில நாட்டில் ஒரு பழமொழி யுண்டு. நமது நாடு சம்பந்தப்பட்டவரையிலும் அந்தப் பழமொழியில், ஒரு திருத்தம் செய்யவேண்டும். "இன்றையக் குழந்தை என்றைக்கும் குழந்தை" என்பது போலத் திருத்தம் செய்துகொண்டு, அதற்கேற்றவாறு, நமது குழந்தைகளைப் பழக்குகின்றோம்.

* * *

பொய் சொல்ல, நாமே நமது குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுக்கிறோம். "எவரேனும் வந்து விசாரித்தால், தகப்பனார் வீட்டிலே இல்லை என்று சொல்லு" என வீட்டிலிருந்து கொண்டே, நாம் நமது குழந்தைகளிடம் சொல்லுகின்றோம். இதைக் குழந்தைகள் கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுகின்றன. பின்னர் ஒரு சமயம் குழந்தைகள் நம்பக்கூடாத அல்லது அவைகளின் அனுபவத்துக்கு எட்டாத உண்மையை நாம் சொன்னால், "என்ன, பொய் சொல்லுகிறீர்களே" என்று சிறிதும் கூச்சமில்லாமல் குழந்தைகள் நம்மைக் கேட்கின்றன. குழந்தைகளின் நலத்தைத் தேடாமல், அவைகள் பொய் கற்றுக்கொள்ளுவதற்கு, நாம் குருமார்களாக அமைகின்றோம். குளிக்க உத்தேசித்து, சேற்றைப் பூசிக்கொள்ளுவதைப்போல, நமது காரியம் ஆகிவிடுகின்றது.

* * *

குழந்தைகளுக்கு விளையாட்டில் விருப்பம் அதிகம். இந்த அனுபவத்துக்கும் உருசுக் காட்டவேண்டியதில்லை என்று எண்ணுகின்றேன். குழந்தைகளின் விளையாட்டுத் தன்மைக்குப் போக்குக் காண்பிக்க, பிஞ்சிலேபழுத்த தாய் தகப்பன் மார்களால் இயலுவதில்லை. எனவே, பயத்தைக் காண்பித்து, குழந்தைகளை அடக்கப் பெற்றோர்கள் எண்ணுகின்றார்கள். "தலையோடு பிறந்தவன் வருகின்றான், உறங்கு. மச்சுப் பூச்சாண்டி வருகின்றான், தூங்கு" என்று பெற்றோர்கள் பயமுறுத்துகின்றார்கள். இவ்வாறு அச்சம் காண்பிப்பதன் விளைவு என்னவென்று அவர்கள் அறிவதில்லை. அச்சத்தை ஆகாரமாகக் கொண்டு வளரும் குழந்தை எந்த முறையில் வளரும் என்று விரித்துக்கூறவும் வேண்டுமா?

* * *

இவ்வாறு வீட்டில் பயம் காண்பித்தது போதாது என்று, "அஞ்சாமல் தனிவழியே போகவேண்டாம்" எனப் பள்ளியில் குழந்தை உபாத்திமார்களினால் போதிக்கப் பெறுகின்றது. தனிவழியேபோனாலொழிய, உலகத்தின் அனுபவமும் மனிதனுடைய அறிவும் விருத்தியடையமாட்டா. தனிவழி போகலாகாது என்று போதிக்கப்பெறும் குழந்தைகள் "மல ஜல"க் கழிப்புக்குக்கூட வீட்டுக்கு வெளியே போக அஞ்சுகின்றன. தாய் தகப்பன் வேலைக்காரன் முதலியவர்கள் பக்கத்தில் துணை நின்று கொண்டிருந்தாலொழிய, குழந்தை இருளில் வீட்டுக்கு வெளியே தலை நீட்டுவதில்லை. இத்தகைய துணிவுடன் வளர்ந்த குழந்தையை சுயராஜ்யத்திற்காகப் பாடுபட எதிர்பார்ப்பது மடமையல்லவா?

காசிநகரத்தைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா என்றுகேட்டால், கறுப்புக்கயிற்றைப் பார்த்திருக்கிறேன் என்று கூசாமல் பதில் சொல்லும் குழந்தைகள் நமது நாட்டில் மலிந்துவருகின்றன. மலை பார்த்திருக்கிறாயா என்றால், பக்கத்து வீட்டு அண்ணாமலையைத் தெரியும் என்று தான் நமது குழந்தைகள் பதில் சொல்லும். நமது குழந்தைகள்—அவைகள் மட்டுமா? நம்மில் வயது வந்தவர்களும் கூட—கிணற்றுத் தவளைகளாக வாழ்ந்து வருகின்றார்கள். ஆனால் அறியாமை தங்களிடம் மிகுந்து நிற்கின்றது என்ற எண்ணம் மட்டும் அவர்களிடம் இல்லை.

* * *

மார்புக்கூடு பின்னாத குழந்தைகளும் நமது நாட்டில் இருக்கின்றனவா? நமது குழந்தைகளுக்கு ஆகாரம் என்ன? பெற்றோர்கள் காண்பிக்கும் அச்சம் ஒன்று என்று ஏற்கனவே சொன்னேன். இன்னுமொரு ஆகாரம் இருக்கின்றது. அது புட்டிப்பால் அல்லது வைத்தியர்கள்கொடுக்கும் மருந்து. குழந்தைகளுக்கு மருந்து கொடுக்காத நாட்களே இருக்கமாட்டா. தட்சிணைக்கும் தானத்துக்கும் வரும் குருமார்களைப்போல், வைத்தியர்கள் நாள்தோறும் வீட்டுக்கு வந்தால், அந்த வீட்டாரின் சுகத்தைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமா? வைத்தியர்களின் மூலமாய்ச் செலவாகும் பொருள் ஒருபுறமிருக்க, உடலுக்கு இயற்கையாக விருக்கும் வலிமை, மருந்து உட்கொள்ளுவதால், மாயமாய்ப்பறந்து போய் விடாதா? மருந்தை நம்பி வளரும் குழந்தைக்கு தன்னிடம் ஒருநாளும் நம்பிக்கை உண்டாகாது.

* * *

அயல் நாட்டார்கள் தங்கள் குழந்தைகளை எவ்வாறு வளர்க்கின்றார்கள் என்பதைக் கண்டால், நாம் அனைவரும் வெட்கமடைந்து போகவேண்டியதாயிருக்கும். குழந்தைகள் மண்ணில் விழுந்து புரளுவதற்கும் அவைகளின் உடம்பில் அசுத்தம் சேர்வதற்கும், பெற்றோர்கள் ஒருநாளும்விடுவதில்லை. குழந்தைகளை அழவிடுவதில்லை. குறிப்பிட்ட நேரங்களிலேதான் குழந்தைகளுக்கு ஆகாரம் கொடுப்பார்கள். நமது நாட்டில், நாள்முழுதும், வேளைகளைக் கவனிக்காமல், குழந்தைகள் அழும்பொழுதெல்லாம், ஆகாரத்தை ஊட்டும் வழக்கம் ஏனைய நாட்டார்களிடம் இல்லை. "ஓடி, விளையாடு பாப்பா" என்று கவி பாரதியார் கூறிய அமுதமொழிகளைப் பின் பற்றுபவர்கள் ஏனைய நாட்டார்கள் தாம். நமக்கு பாரதியாரையும் குழந்தைகளையும் பற்றி என்ன கவலை? மரம் வைத்தவன் நீர் ஊற்றுகின்றான் என்ற பொய் வேதாந்தம் நம்மிடம் இருக்கும் வரையில், நமக்கு ஊக்கமும் பொறுப்பும் உண்டாகுமா?

* * *

பெரிய நிர்வாகத்துக்கு, நாம் நமது குழந்தைகளைப்பழக்குவதில்லை. துணிவுள்ள எந்தக்காரியத்தையும் குழந்தைகள் செய்ய முற்பட்டால், "செய்யாதே, செய்யாதே" என்று மண்டையில் அடிப்பதைப் போல, நாம் தடை செய்கின்றோம். குழந்தைகளின் சந்தேகங்களைத் தீர்க்க,நமக்கு நேரே தெரிவதில்லை. ஏதேனும் சந்தேகக் கேள்வியைக் குழந்தைகள் கேட்டால், அவ்வகளின் வாய்களை அடைத்து விடுகின்றோம். "மற்றக்கேள்விகளைத் தெரிந்து கொண்டு விட்டாயோ? இந்தக் கேள்விமட்டும்தான் பாக்கியோ" என்று கேலி செய்து, அவைகளுக்கு வாய்ப்பூட்டுப் போட்டு விடுகின்றோம். இந்த முறையைக் கையாண்டால், குழந்தைகளின் அறிவு வளருமா? அறிவும் ஆற்றலும் வளர்ச்சி பெறாமல் வாழும் குழந்தைகள் தமக்குத்தான் பயன்படுமா? அல்லது நாட்டுக்குத்தான் பயன்படுமா?

* * *

துள்ளுகிற மாடு பொதி சுமக்கும் என்பார்கள். இதன் பொருள் என்ன? கன்றுக்குட்டியாயிருக்கையில், எந்தமாடு துள்ளி விளையாடுகின்றதோ, அதுதான் பிற்காலத்தில் உடல் வலிமை பெற்று, வைத்த சுமையை இழுக்கும். கட்டுத்தரையில் சோம்பிப் படுத்துறங்கும் மாடு தனக்கும் பயன்படாது; அதை வளர்ப்பவனுக்கும் பயன்படாது. இளமைப்பருவத்தில் நன்றாக விளையாடும் குழந்தைகள் தான், வயது வருங்காலத்தில், வாழ்க்கைப் பொறுப்பை ஏற்பதற்கான உடல் வலிமையையும் உள்ளத்தின் உறுதியையும் பெற்று வாழக்கூடும். குழந்தைகளின் வளர்ச்சியில் கவனம்செலுத்தாத நாட்டார்கள் எத்தகைய நற்காரியத்தையும் செய்யத் தகுதியுடையவர் களல்லர். எனவே, நமது நாட்டில், இப்பொழுது சுயராஜ்யப் பேச்சு எதற்காக?

## கல்விச் சாதனங்கள்.

திரு. பெர்னார்ட் ஹௌடன் "கரெண்ட் தாட்" பத்திரிகையில் எழுதியது.

(கட்டுரையின் சிறப்பான பகுதியை மட்டும் மொழிபெயர்த்து இங்கு தருகின்றோம். ப-ர்.—ஊழியன்.)

ஒவ்வொரு பெரிய கிராமத்திலும், ஒரு வாசகசாலையும், புத்தகசாலையும் இருக்க வேண்டும். அதை மேற்பார்க்க ஒருவர் இருக்கவேண்டும். அனேகமாய், கிராமக் கணக்கரே, இந்த வேலையைப் பார்த்துக் கொள்ளக்கூடும். புத்தகசாலையில் இருக்கும் நூல்கள் படிப்பவர்களுக்கு நற்போதனை யளிக்கக்கூடிய நூல்களாயிருத்தல் வேண்டும். புத்தகங்களில் பல இந்திய ஆசிரியர்களால் எழுதப் பெற்றிருக்கவேண்டும். உயிருடன் இருக்கும் இந்திய ஆசிரியர்களால் எழுதப்பெற்ற நூல்களையும் புத்தகசாலையில் வைத்திருக்கவேண்டும். அன்னிய நாட்டு நூல்களின் மொழிபெயர்ப்புக்களும் வாசகசாலையில் இருத்தல்வேண்டும். அரசாங்கத்தாரும் ஜில்லா போர்டு அமைப்புகளும் (தகுதியுள்ளவர்களுக்கு) பொருள் உதவிசெய்து,மொழிபெயர்க்கச்செய்யலாம்.

உலகஇலக்கியத்தையும் ஆராய்ச்சியையும் இந்தியர்கள் யாவரும் தெரிந்து கொள்ளக் கூடிய நிலையில் நூல்களை அமைப்பது நமது நோக்கமாக விருக்க வேண்டும். ஒரு நூல் எந்த நாட்டுக்குச் சொந்தமாயினும், எந்த மொழியில் எழுதப் பட்டிருப்பினும் பாதகமில்லை. அந்த நூல் இந்தியர்களின் அறிவையும் அனுபவத்தையும் விசாலப்படுத்தும் என்ற நம்பிக்கை நமக்கு இருக்குமாகில், அந்த நூலைப்படிக்கும்படியான வசதியை, நாம் இந்தியர்களுக்குத் தேடிக் கொடுக்க வேண்டும். ஒரு நூலைப்படிப்பதனால், எவ்வளவு வரையில் ஒரு மனிதன் முற்போக்கு அடைவான் என்று நிறுத்து, யாரால் சொல்லமுடியும்? ஆசிரியர் மிகத்திறமை கொண்டவராயிருப்பின், அவர் நாட்டாரின் வாழ்வையே அடியோடு மாற்றிவிடக் கூடும். ருஷிய நாட்டு டால்ஸ்டாய் மகாத்மாவின் காந்தியை அடியோடு மாற்றிவிட்டார். டால்ஸ்டாயின் கருத்துக்கள் மகாத்மா எழுத்தின் மூலமாய் வெளித்தோன்றி, இந்திய நிலையை மாற்றிவிட்டது எனக் கூறுவது மிகையாகாது. ஆலின் விதை சிறிது; ஆனால் படர்ந்த ஆல் "மன்னர்க்கிருக்க நிழலாகும்."

வாசகசாலையின் வேலைக்கு உதவியாக, பிரசங்கங்களும் நடைபெறலாம். பிரசங்கங்களுக்காக, மிகுதியான பணம் செலவு செய்யவேண்டியதில்லை. எழுதப்படிக்கத் தெரியாத, ஆனால் அறிவுடன் வளர்ந்திருக்கும் மனிதர்களுக்குப் பிரசங்கங்களின் மூலமாய்ப் பயன் உண்டாகும் என்ற இலாபமிருக்கின்றது. கிராமத்துக்கு கிராமம் சென்று, பிரசங்கங்கள் செய்து, அறியாமையைப்போக்கி, பெரிய நூலாசிரியர்களின், ஞானிகளின், உபதேசங்களைப் பரப்புமாறு ஜில்லா சபைகள் ஏற்பாடு செய்யலாம். சுகாதாரமும் ஆராய்ச்சி முடிவுகளும் பிரசங்கங்கள் மூலமாய்ப் போதிக்கப்படலாம். இத்தகைய உபயோகமுள்ள வேலையில், இந்தியாவிலிருக்கும் தேசபக்தர்கள் யாவரும் கலந்து கொள்ளலாம். தமது நாட்டார்களின் அறியாமையைப் போக்குவது, தேசபக்தர்களின் ஆவலாக இருக்க வேண்டுமல்லவா? பிரசங்கங்களினால் உபயோகமான வாதம் நிகழும்; பயனுள்ள அறிவும் பரவும். இந்த சாதனத்தின் மூலமாய், பெரிய நன்மை, சிறிய செலவில், ஏற்படும்.

சிரத்தையும் நேரான மனப்பான்மையும் இருக்குமாகில், இந்த எளிய சாதனங்களின் மூலமாய், முற்போக்கு அடைந்திருக்கும் நாடுகளுடன் இந்தியா ஒருபாய்ச்சலில் சேர்ந்துகொள்ளலாம். மகத்தான எதிர்கால இந்தியாவின் அடிப்படையை இவ்வாறு கோலக்கூடும்.



## கடிதங்கள்.

### சொக்கநாதபுரம்.

மேல்கண்ட ஊரை நினைக்கும்தோறும் கண்களினின்று நீர் தாரை தாரையாக வருஷிக்கின்றது. இதை எழுத நினைக்கும் பொழுதே கை நடுக்கம்கொள்கின்றது. அவ்வூர் வாசிகளின் பரிதாப நிலையை என்னென்று எழுதுவது! நான் தவறாது ஓலைக் குடிசைகளில் நெருப்பிடுவதும் கல்வீடுகளில் களவாடுவதும் கண்ணாவியாய்விட்டது. அவ்வூரில் வசிக்கும் தனவணிகர் படும்பாடு எழுதத்தரத்ததன்று. நான் தவறாது இவ்வளவு கொடுமைகள் நடந்துவருவது தெரிந்தும் அவ்வூர் வாசிகள் கவனித்து அதற்காகவேண்டியது செய்யாது வீண்காலம் கழித்துவருவது வருந்தத்தக்கதே. இனியாவது, சிமான்கள் பெரு முயற்சிசெய்து, ஊருக்குக் காவல் இட்டு, பெண்களையும் பிள்ளைகளையும் கவலைக்கு இடமில்லாது காப்பாற்றுவார்களென்று நினைக்கிறோம் என்று உண்மை உரைப்போன் எழுதுகிறார்.

### இரங்கூன்.

தனவைசிய இளைஞர் தமிழ்ச்சங்கம்:—நிகழும் அட்சய ஆண்டு கார்த்திகைத்திங்கள் இருபத்தி ஏழாம் நாள் ஞாயிற்றுக்கிழமை மாலை நான்கு மணிக்கு திருவாளர் பெரி. இலக்குமணச் செட்டியாரவர்களின் தலைமையில் ஓர் கூட்டம் நடைபெற்றது. அதுகாலை திருவாளர் மு. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களால் "தனவணிக வாலிபர் மகாநாடு" இவ்வருடத் தைப்பூச சமயத்தில் கூட்டிவைக்க வேண்டுமென்று பர்மாவிலுள்ள தனவணிக வாலிபர்களை இச்சங்கத்தார் கேட்டுக்கொள்ளுகிறார்கள் என்பதாக ஓர் தீர்மானம் கொண்டுவரப்பட்டது. அதன்பின் திரு. மு. சோமசுந்தரஞ்செட்டியாரவர்கள் வாலிபர் மகாநாடு கூட்டவேண்டியது முக்கியமென்றும் பெண்களை இப்பகுதிகளுக்கு உடன் அழைத்துவருவதற்கு அம்மகாநாட்டில் ஓர் தீர்மானம் கொண்டுவரவேண்டுமென்றும் பல உதாரணங்கள் அழகாக எடுத்துக்காட்டி இத்தீர்மானத்தை ஆமோதித்தார்கள். பிறகு திருவாளர்களான வீர. அள. அழகப்ப செட்டியாரவர்களும் (மீனா) சுப. கருப்பையாச் செட்டியாரவர்களும் சுப. இராமசாமிச் செட்டியாரவர்களும் மு. இலக்குமணச் செட்டியாரவர்களும் பழ. ப. நாராயணனும் திரு. மிகு. உபாத்தியாயர் அய்யாவய்யர் அவர்களும் பத்மநாப ராஜு அவர்களும் இம்மகாநாடு கூட்டிவைக்கவேண்டியது அவசியமென்று ஆதரிக்க, தீர்மானம் ஏகமனதாய் இனிது நிறைவெய்தியது. அதன் பின்னர் தலைவரவர்கள் முடிவுரையில் இம்மகாநாடு கூட்டுவதால் எவ்வளவோ நன்மைகள் இருக்கிறதென்றும் இம்மகாநாட்டை முதலில் கூட்டி ஓர் கிளர்ச்சி உண்டாக்கிவிடுவோமேயானால் இதிலிருந்து மக்களுக்கு ஓர் உணர்ச்சி உண்டாகிவிடுமென்றும் அநேக உதாரணங்கள் எடுத்துக்காட்டிச் சபையை இனிது பரவசப்படுத்தினார்கள். முடிவில் மு. இலக்குமணச் செட்டியாரவர்களால் அனைவருக்கும் வந்தனம்கூறப்பெற்று, அவை (௬) மணிக்கு இனிது நிறைவெய்தியது என்று காரியதரிசி எழுதுகிறார்.

### தமிழ்ச்சங்க அறிவிப்பு.

மதுரைத் தமிழ்ச்சங்க மானேஜர் பின்வருமாறு அறிவிக்கிறார்:—

௧௯௨௭-ஆம் மார்ச்சுமீ முடிவில் இம் மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் வழக்கம்போல் நடத்தப்பெறும் ஆங்கிலக் கலாசாலை மாணவர்களுக்காக ஏற்படுத்தியுள்ள மெற்றிக், எப். ஏ., பீ. ஏ., ஆங்கிலத்தமிழ்ப் பரீட்சைக்கு ௧௯௨௭-ஆம் ஜனவரிமீ ௨௨௨க்குள்ளும், ௧௯௨௭-ஆம் ஏப்ரல்மீ ௪, ௫, ௬-ம் தேதிகளில் நடத்தப்பெறும் தனித் தமிழ்ப் பரீட்சைக்கு அட்சய ஆண்டு தைமீ ௨௦௨ (௨-௨-௨௭) க்குள்ளும், ஷை தமிழ்ச்சங்கப் பரீட்சைக்கு வரும் மாணவர்கள், விண்ணப்பப் பாரங்களையும் பரீட்சைக் கட்டணத் தொகையையும் இச்சங்க ஆபீசு மானேஜருக்கு அனுப்பவேணடுமென்றும், மேலே குறிப்பிட்ட தேதிக்குப்பின்பு வராகும் யாவும் அங்கீகரிக்கப்படமாட்டாவென்றும் இதன்மூலம் அறிவிக்கலாயிற்று.

## கப்பல்.

"டைரியா" கப்பல் நாளை தினம் சென்னைத் துறைமுகத்திற்கு வரும். இம்மாதி ௩௧-ம் நாள் வெள்ளியன்று சென்னையை விட்டுப் புறப்பட்டு நாகப்பட்டணம் வந்து, நாகப்பட்டணத்திலிருந்து இம்மாதி ௩௧-ம் நாள் ஞாயிறு அன்று மலேயா நாட்டிற்குப் புறப்படுகிறதெனவும் பிரயாணிகள் காலையிலேயே வந்துவிட வேண்டுமெனவும் கப்பல்காரர்களின் ஏஜண்ட் நமக்கு அறிவிக்கிறார்.

"டிஸ்டா" கப்பல் இம்மாதி ௩௦-நாள் சனியன்று சென்னைத் துறைமுகத்திற்கு வரும். இம்மாதி ௩௫-ம் நாள் புதனன்று சென்னையைவிட்டுப் புறப்பட்டு நாகப்பட்டணம் வந்து, நாகப்பட்டணத்திலிருந்து இம்மாதி ௩௭-ம் நாள் ஞாயிறு அன்று மலேயா நாட்டிற்குப் புறப்படுகிற தெனவும் பிரயாணிகள் காலையிலேயே வந்துவிட வேண்டுமெனவும் கப்பல்காரர்களின் ஏஜண்ட் நமக்கு அறிவிக்கிறார்;

"டைரியா" கப்பல் மறுபடி இம்மாதி ௨௧-ம் நாள் புதனன்று சென்னைத் துறைமுகத்திற்கு வரும். இம்மாதி ௨௩-ம் நாள் வெள்ளியன்று சென்னையை விட்டுப் புறப்பட்டு நாகப்பட்டணம் வந்து, நாகப்பட்டணத்திலிருந்து இம்மாதி ௨௫-ம் நாள் ஞாயிறன்று மலேயா நாட்டிற்குப் புறப்படுகிறதெனவும் பிரயாணிகள் காலையிலேயே வந்துவிட வேண்டுமெனவும் கப்பல்காரர்களின் ஏஜண்ட் நமக்கு அறிவிக்கிறார்.

### லாட்டரிச் சீட்டும் — அறநிலயமும்.

தாய்:—இந்த நான்கணாப் பணம் எதற்காக?

மகன்:—உங்களுக்குத்தெரியாதா? குருட்டுக் குழந்தைகளுக்கு அவர்கள் விடுதி கட்டப் போகின்றார்கள். அதற்குப் பொருள் சேர்க்க, லாட்டரிச் சீட்டுப் போடுகிறார்கள். எட்டணாச் சீட்டு ஒன்று நான் வாங்கினால், எனக்கு ஆயிர ரூபாய்ப் பரிசு விழுந்தாலும் விழும். விழுந்தால் நன்றாயிருக்காதா, அம்மா?

தாய்:—லாட்டரிச் சீட்டா?

மகன்:—ஆம் அம்மா. பத்துப் பரிசுகள் இருக்கின்றன.

தாய்:—சூதாட்ட மூலமாயும் குழந்தைகளைக்கொண்டும், என்ன தருமம் நடக்கின்றது? அறநிலயங்களைக்காண சூதாட்டச் சீட்டு வருமானத்தைத்தானா உபயோகப்படுத்தவேண்டும்?

தெருவில் வண்டிப் போக்குவரத்துச் சத்தம், தொழிற்சாலைகளில் உண்டாகும் சத்தம் இவற்றைக் கேட்காமலிருக்கும்படி செய்வதற்காக, லண்டனிலும் இதர இடங்களிலும் ருசிகரமான பரிட்சைகள் செய்யப்பெற்றனவாம். கானடாவில் கடலில், ஒரு வகைக் கடற்பூண்டாலமைந்த க்ரபட்குவில்ட், என்ற கடற்பஞ்சை சுவரிலும்மச்சிலும் பரப்பி ஒட்டி விடுவதால் சத்தம் அதனால் இழுக்கப்பட்டுக் குறைந்து போகிறதாம்.

* * *

"நாட்டிற்கு நலம்பயப்பதென நாம் கருதுவதைச் செய்ய, நாம் யாவரும் தயாராயிருக்கிறோம். ஆனால், அடுத்த வீட்டுக்காரனுக்கு அதே மாதிரி செய்ய, நாம் எப்பொழுதும் தயாராயிருப்பதில்லை" என்று ஸர் வில்லியம் ஜாயின்ஸன்ஹிக்ஸ் என்பவர் கூறுகிறார்.

குறிப்பு:—பீ. ஏ., சீனியர் வகுப்பு மாணவர்கட்கு யூனிவர்சிடியாரால் வைக்கப்பட்ட குரூப் ௬ தமிழ்ப்பாடங்களும், ஸ்கூல் பைனல் வகுப்பு மாணவர்களுக்கு வி குரூப்புக்கு ஏற்பட்ட ஏ—வி குரூப்புத் தமிழ்ப் பாடங்களும், இண்டர்மீடியேட் வகுப்பு மாணவர்கட்கு யூனிவர்ஸிடியாரால் இண்டர்மிடியேட் வகுப்புக்கு வைக்கப்பட்டுள்ள தமிழ்ப்பாடங்களும சங்கப் பரீட்சைகட்கு வைக்கப்பட்டுள்ள தமிழ்ப்பாடங்களாகும்.

அரை அணா லேபிலில் அனுப்பினால் விண்ணப்பப்பாரம் இவ்வாபீசினின்றும் பெறலாம்.

## தமிழகராதி.

சென்னைச் சர்வகலாசாலை ரிஜிஸ்டிரார் பின் வருமாறு அறிவிக்கிறார்:—சென்னைச் சர்வகலாசாலையாரால் வெளியிடப்பெற்ற தமிழ் அகராதி (லெக்ஸிகன்) யின் பிரதிகள், (ஏ) கல்லூரிகள், ஹைஸ்கூல்கள், கீழ் நாட்டுக்கல்விஸ்தாபனங்கள் (ஓரியண்டல் இன்ஸ்டிட்யூஷன்) ஆகியவற்றின் மாணவருக்கும், (பி) சகண்டரி பள்ளிக்கூடம், ஹைஸ்கூல்கள் இவற்றின் உத்தியோகஸ்தர்களுக்கும், (ஸி) கல்லூரிகளில் வேலை பார்த்துவரும் பண்டிதர்களுக்கும், (சென்னை) வேப்பேரி டையஸீஸன் அச்சியந்திர சாலையில், பாதி விலைக்கு விற்பனைக்குக் கிடைக்கும். அவர்கள் தங்கள் விண்ணப்பங்களை சம்பந்தப்பட்ட ஸ்தாபனங்களின் தலைவர் மூலமாய் அனுப்ப வேண்டும்.

பெர்லின் போலீஸாரால், பகற்கொள்ளைக்காரர்கள், இராக்கொள்ளைக்காரர்கள், கொலையாளிகள் முதலியோரை எதிர்ப்பது போன்ற போலீஸ் காட்சியொன்று நடத்தப்படுகிறதாம். அதில் கூர்மையாய் நடிப்பதால், அது உண்மை போலத் தோன்றுகிறதாம். இதனால், ஜனங்கள் தங்களைத்தற்காத்துக் கொள்ளும் வழிகளில் பயிற்சி அடைகிறார்களாம். ஆனால், கொள்ளைக்காரர்களும் அவர்களது கூட்டாளிகளும் இவ்வழிகளை ஆய்ந்து வருவதற்காக, தங்கள் ஆட்களையும் அனுப்புகிறார்களாம்!

* * *

பிரிட்டிஷ் நிமிலிங் கலத்தொழில் பதினெட்டாம் நூற்றாண்டில் உச்ச நிலையில் இருந்ததாம். சிற்சில, நூறு ஆண்டுகளுக்கு முன், ஸ்காத்லாந்தியன் ஒருவன் பிடித்த ஒரு திமிங்கிலம் இதுவரை பிடிக்கப்பட்ட திமிங்கிலங்களுள் எல்லாம் மிகப்பெரியவைகளில் ஒன்று எனப்படுகிறது. அதன் கொழுப்பும் எலும்பும் ௧௧,௦௦௦ பவுன்கள் விலை போயிற்றாம். இப்பொழுதிருக்கிற விலைப்படியோ, அதனால் கிடைத்திருக்கக்கூடிய விலை ௧, ௨௦, ௦௦௦ பவுன்களுக்குக் குறையாது எனப்படுகிறது.

* * *

௧௯௨௫-௨௬-ம் ஆண்டில் இந்தியாவில் இறக்குமதியான மோட்டார்களின் எண்ணிக்கை ௧௨,௭௦௭. அவற்றின் மொத்தவிலை ௨ கோடியே ௮௨ லட்சரூபாய். மொத்தம் இறக்குமதியான மோட்டார்களில், நூற்றுக்கு ௬௭ கானடாவிலிருந்தும், ௧௨ அமெரிக்க ஐக்கியமாணத்திலிருந்தும், ௧௧ இங்லாந்திலிருந்தும், ௭ இத்தாலியிலிருந்தும் முறையே வந்தன. இறக்குமதியானவற்றில், நூற்றுக்கு ௨௧ பம்பாயிலும், ௩௩ வங்காளத்திலும், சிந்துவில் ௧௫-ம், சென்னையில் ௧௫-ம், பர்மாவில் ௧௧-ம் வியாபாரமாயின.

* * *

ரேடியத்தைக் கண்டுபிடித்து விட்டார்கள். எக்ஸ்ரேயின் உபயோகத்தைக் கண்டு பிடித்துவிட்டார்கள். என்றாலும், ஒரு சாட்டையைச் சொடுக்கினால், சத்தம் எப்படி உண்டாகிறது என்றாவது ஏன் உண்டாகிறது என்றாவது இன்னும் தெரியவில்லை. சத்தம் சாட்டையால் உண்டாகிறதா அல்லது காற்றால் உண்டாகிறதா? இது இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லையாம்.

## பொய் வதந்தி.

மார்கழி மீ ௩௨ வெளியான "[illegible]" என்னும் பத்திரிகையில் ஆ. [illegible] என்ற தலைப்பின் கீழ் நமது தனவணிக நாட்டுத் தமிழ்க்கல்விக் கழகத்தைப் பொது ஜனங்கள் தப்பாக உணரக்கூடிய நிலையில் ஒரு குறிப்பு வெளியாகியிருக்கிறது. நமது கல்விக்கழகத்தைப் பற்றி அப்பத்திரிகை நிருபரோ, அல்லது ஆசிரியரோ தங்கள் அபிப்பிராயமாக என்னென்ன எழுதிய போதிலும், நான் கவனிக்கப்போவதில்லை. அப்பத்திரிகை கல்விக்கழகத்தில் [illegible] பிராயங்கொள்ளவில்லை என்பதற்கு கல்விக் கழகம் ஏற்பட்டது முதலே, அது சம்பந்தமாக அதில் வெளிவந்த குறிப்புகள் சாட்சியாகும். ஆதலால் அப்பத்திரிகையின் கருத்தை நாம் பொருட்படுத்த வேண்டுவதில்லை. பிரஸ்தாபக் குறிப்பில் நிருபர் என்ற பெயரால் நிகழ்ச்சிகளாக [illegible] விஷயம் எழுதப்பட்டிருக்கிறது. அதில் காணப்படும் குறிப்பும் பின்வருமாறு:—

நிர்வாக மாற்றம்:—இவ்வூரில் காலஞ்சென்ற திருவாளர் அரு. அ. முத்தப்பா செட்டியாரவர்களால் ஸ்தாபிக்கப்பெற்ற கல்விச்சாலையை, திரு. செட்டியாரவர்கள் செலவிலேயே தனவணிகநாட்டுக் கல்விக் கழகத்தார் நிர்வகித்து வந்தனர். அவர்களது நிர்வாகத்தில் செலவு அதிகமாக ஏற்படுகிறதென்று கூறி நிர்வாகத்தை அவர்களிடமிருந்து மாற்றி சொந்தக்காரர்களே நிர்வகித்து வருகின்றனரென்று அறிகிறேன். இங்ஙனமே கல்விக்கழகத்தாரது நிர்வாகத்திலிருந்துவந்த பாகனேரிக் கல்விச்சாலையும் அவர்களது கையைவிட்டுப் போய் விட்டதெனக் கூறப்படுகிறது என நிருபர் எழுதுகிறார்.

"திரு. செட்டியாரவர்கள் செலவிலேயே தனவணிக நாட்டுக் கல்விக் கழகத்தார் நிர்வகித்து" என்பது உண்மை. வந்தனர் என்று முடித்திருப்பதும் அதன் கீழ் இருக்கும் அனைத்தும் முழுப்பொய். இப்பொழுதும் எங்கள் நிர்வாகத்தில் இன்னும் பல பள்ளிக்கூடங்கள் இருப்பதுபோல் அரண்மனை சிறுவயல், பாகனேரி இரண்டு ஊர்ப் பள்ளிக்கூடங்களும் இருந்து வருகின்றன. அபரிமிதமான செலவு என்றும் கையை விட்டுப்போய்விட்டது என்றும் பிறவுமான பொய்களை யெல்லாம் கூறி, அந்தப் பத்திரிகையின் நிருபர் என்பார் பிரதபிப்பதற்கு என்ன காரணம் என்று கேட்க, நான் விரும்பவில்லை. அப்பத்திரிகையில் கல்விக் கழகத்தைப் பற்றி இம்மாதிரி வெளிவருதற்குக் காரணங்கள் எனக்குத் தெரியும். ஏனைய உண்மை அன்பர்கட்கும் தெரிந்திருக்கலாம். அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. பொது ஜனங்கட்கு உண்மையை அறிவிக்கும் கடமையையே இப்பொழுது மேற்கொள்கின்றேன். நமது கல்விக்கழகத்தைப் பற்றிப் பொறாமை கொண்டு சிலர் சில பொய் வதந்திகளைக் கிளப்பிக் கொண்டே யிருக்கின்றனர். அவைகளை எவரும் நம்பவேண்டாம். கல்விக்கழகத்தைப் பற்றிக் குமரனில், ஆசிரியரோ, நிருபரோ எழுதும் எந்நிகழ்ச்சியையும் மெய்யென்று பொதுஜனங்கள் கொள்ளலாகாது. குமரனில் கல்விக்கழகத்தைப்பற்றி என்ன எழுதப்பட்ட போதிலும் நான் பதில் எழுதப்போவதில்லை. "நிருபர் தவறாக எழுதியிருக்கலாம். அதற்கு ஏன் அப்பத்திரிகைக்கே பதில் எழுதக்கூடாது" என்று சிலர் கேட்கலாம். பொதுவிதி அதுதான். ஆனால் இதில் அம்முறை வேண்டுவதில்லை என்பதற்குக் காரணமுண்டு. இதை இன்னும் நீட்ட நான் விரும்பவில்லை. நமது கல்விக் கழகத்தைப்பற்றிக் குமரனில் என்னென்ன குறிப்புகளும கட்டுரைகளும் வெளியானாலும் ஆகட்டும், நான் எதற்கும் பதில் கூறப் போவதில்லை. அதிற் குறித்த இரண்டு ஊர்ப்பள்ளிக்கூடங்களும் கல்விக்கழக நிர்வாகத்தில்தான் நடந்து வருகின்றன என்பது உண்மை. கல்விக்கழகத்தைப் பற்றி ஏதும் அறியவேண்டுமானால் அன்பர்கள் எனக்கு நேரே எழுதி உண்மை அறிந்து கொள்ளலாம் எனக் காரியதரிசி சொரூபன் திரு. மு. காசிவிஸ்வநாதன் அவர்கள் அறிவிக்கிறார்கள்.

## பொருள் அடக்கம்.



ஊழியன்

மன்னவர் தமக்கும் அஞ்சேன்
மாண்பெரும் நாட்டிற் காக
என்னுயிர் தனையும் ஈவேன்
எதற்குமியான் யாண்டும் அஞ்சேன்
பன்னரும் பார தத்தாய்
பண்டைவாழ் வெய்தப் பாரில்
ஒன்னலர்க் கஞ்சா நல்ல
ஊழியம் தலைமேற் கொண்டேன்.

காரைக்குடி
அட்சய-௵ மார்கழி-மீ கூ-உ

# அவமானம்.

இந்தியாவில் வசிக்கும் ஐரோப்பியர்களின் தலைச்சங்கம் கல்கத்தா நகரில் இருக்கின்றது. அதன் கிளைகள் நமது நாட்டிலுள்ள முக்கியமான நகரங்களில் இருக்கின்றன. நாட்டுக்குப் புதிதாய் வரும் வைஸிராய், கவர்னர்களுக்கும், நாட்டை விட்டுப்போகும் வைஸிராய், கவர்னர்களுக்கும் இந்தச் சங்கத்தார் விருந்தளிப்பதுண்டு. விருந்துக் காலங்களிலேதான், அரசியல் சம்பந்தமான சிக்கலான கேள்விகளைப்பற்றி, இந்தச் சங்கத்தில் பேசப்பெறும். வைஸிராய்களும் கவர்னர்களும் இந்தச் சங்கத்தாரால், புத்திமதி கூறப்படுவார்கள். அரசியலில் நேரே இந்தச் சங்கத்தார் கலந்து கொள்ளாவிடினும், அவர்களுக்கு மிகுதியும் செல்வாக்குண்டு. அரசியல் பொறுப்பு அவர்களுக்குக் கிடையாது. ஆனால், அதனால் விளையும் செல்வாக்கு மட்டும் அவர்களுக்கு உண்டு. இந்தியாவில் வாழும் பொறுப்பற்ற "செல்வ"க் குழந்தைகள் ஐரோப்பியச் சங்கத்தார். என்றாலும், இந்தக்குழந்தை கூறும் "மழலை"ச் சொற்களுக்கு இந்திய அரசாங்கத்தார் காது கொடுப்பார்கள். வைஸிராய் இர்வின் பிரபு கல்கத்தாவுக்கு விஜயம் செய்கையில், ஐரோப்பியச் சங்கத்தார் விருந்தளித்தார்கள். அந்த சமயம் சங்கத்தின் தலைவர் திரு. லாங்பர்ட் ஜேம்ஸ் அவர்கள் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். இந்தியர்களுக்கு அவமானம் விளைக்கக் கூடிய சில கருத்துக்களை அவர் வெளியிட்டிருக்கிறார். அதற்கு விடையளிப்பது பொது ஜன ஊழியர்களின் கடமை யாகும்.

"இந்தியாவில் வாழ்வதற்கு ஆங்கிலேயர்களுக்கு உரிமை உண்டு; ஏனெனின் இந்தியாவை ஆக்கியவர்கள் ஆங்கிலேயர்கள்; மேலும் பலகாரணங்கள் உண்டு" என்று ஜேம்ஸ் அவர்கள் கூறுகின்றார். இந்தியாவில் வாழ்வதற்கு ஆங்கிலேயர்களுக்கு உரிமை உண்டு என்று அவர் கூறியிருப்பதை நாம் ஏற்றுக்கொள்ளுகின்றோம்; ஆனால் அவர் கூறும் காரணங்களை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது. அந்தந்த நாட்டின் சட்டதிட்டங்களையும் ஜனசமூகப் பழக்கவழக்கங்களையும் எதிர்த்தோ அல்லது அவமதித்தோ வாழாமல், நற்குடிக்கேற்ற உரிமைகளையும் கடமைகளையும் ஏற்றுவாழும் மனப்பான்மை கொண்டவனுக்கு உலகத்தில் எந்த நாட்டிலும் வாழ உரிமை உண்டு. எந்த ஜன சமூகத்தாரும் இத்தகைய மனப்பான்மை கொண்டவர்களை ஏற்க மறுக்கமாட்டார்கள். எனவே, ஆங்கிலேயர்கள் இந்தியாவில் வாழ மனங்கொள்ளுவதை எந்த இந்தியனும் ஆட்சேபிக்கமாட்டான்; ஆட்சேபித்ததாகவும் தெரியவில்லை. ஆங்கிலேயர்கள் இந்தியாவில் வாழ்வதை, தீவிர அரசியல்வாதிகள் விரும்பவில்லை என்று ஜேம்ஸ் அவர்கள் கூறுவது முழுப்பொய். அரசியல் வாதிகளுக்கு உலகப் பழக்கம் இல்லை என்பது ஜேம்ஸ் அவர்களின் கூற்றின் கருத்தா? ஆங்கிலேயர்களின் நற்குணங்களையும் தீயகுணங்களையும் பகுத்தறிந்து, நடப்பவர்கள் இந்திய அரசியல் வாதிகள்தான்.

இந்தியாவை ஆக்கியவர்கள் ஆங்கிலேயர்கள் என்று பெருமையுடன் திரு. ஜேம்ஸ் கூறுகின்றார். ஏனைய நாடுகளை ஆக்கியதுபோல, இந்தியாவையும் ஆக்கியவர் கடவுள். ஆனால் இந்தப்பொருளில், திரு. ஜேம்ஸ் அவர்கள் தமது சொற்களை உபயோகப்படுத்தவில்லை என்பதை நாம் அறிவோம். அரசியல் இந்தியாவை ஆக்கியவர்கள் ஆங்கிலேயர்களாயின், தற்போதைய அரசியல் ஆங்கிலத்தை ஆக்கியவர்கள் ரோமர்கள், பிரஞ்சுக்காரர்கள், உலாந்தாக்காரர்கள், ஜர்மானியர்கள். இந்த உண்மை ஆங்கில நாட்டின் சரித்திரம் அறிந்தவர்களுக்கு நன்கு தெரியும். மேற்கூறிய நான்கு நாட்டார்களையும் தங்கு தடையின்றி ஆங்கில நாட்டில் குடியேற்றிக் கொள்ள, ஆங்கிலேயர்கள் மனமிசையலாமே! இந்தியாவை ஆக்கியவர்கள் ஆங்கிலேயர்கள் என்று ஒருவர் சொல்லுவதைக் கேட்பதைக்காட்டிலும் இந்தியாவுக்கு வேறு அவமானமும் உண்டா? மேலே கூறப்பட்ட சொற்களுக்குப் பொருள் என்ன? இந்தியர்களுக்குச் சொந்தமான அறிவும் ஆற்றலும் இல்லை என்பது பொருளாகும். அன்னியர்களின் ஆட்சி நம்மிடையே உலவுவதே இதற்குத்தக்க சான்று என்று திரு. ஜேம்ஸ் சொல்லக்கூடும். அவர் அவ்வாறு கூறுவதில் உண்மையுண்டு என்பதை நாம் ஏற்காமலிருக்கமுடியாது. ஆனால் அந்த சொற்களில் தொனிக்கும் அவமானத்தைப் பொறுப்பதும் முடியாது. உண்மையிலேயே, இந்தியாவை ஆக்கியவர்கள் ஆங்கிலேயர்கள்தானா? இந்தியர்களின் சமுதாய வாழ்வும், செல்வச் செழிப்பும், கைத்தொழில் திறனும், ஒற்றுமை உணர்ச்சியும், ராணுவப் பயிற்சியும் தன் மதிப்பும் ஆங்கில ஆட்சியின் மூலமாய் அழியப்பெறவில்லையா? மேற்கூறிய அருந்தனங்கள் யாவையும் இழந்த இந்தியா, ஆங்கிலேயர்களால் ஆக்கப்பெற்றதா அல்லது அழிக்கப்பெற்றதா? நடுநிலையில் நின்று எழுதப்பெறும் சரித்திரம்தான் இதற்கு முடிவுகூற முடியும். இதுசம்பந்தமாகக் இதுபோழ்து கூறப்பெறும் இருதிறத்தார்களின் மொழிகளுக்கும் பொருள் இருப்பினும், நடுநிலைத்தன்மை இருக்காது. எனவே இதைப்பற்றி விரிவாக எவரும் பேசவேண்டியதில்லை. சுயராஜ்ய முயற்சியில் இந்தியர்கள் கண்ணும் கருத்துமாக இருந்து முயன்றால், அதுவே திரு. ஜேம்ஸ் அவர்களின் இறுமாப்புப் பேச்சுக்குத்தக்க விடையாக அமையும்.

"மேலும் பல காரணங்களுண்டு" என்று திரு. ஜேம்ஸ் அவர்கள் குறிப்பாகக் கூறுகின்றார். அந்தக் காரணங்கள் யாவை? இந்தக் கேள்விக்கு, கேள்வி கேட்பவர்களின் மனப்பான்மைக்கு ஏற்றவாறு விடைகள் வெளிவரும். இந்தியாவை ஜயித்தவர்கள் ஆங்கிலேயர்கள் என்பது ஒரு காரணமாயிருக்கலாம். இந்தியாவில், ஆங்கிலேயர்களுக்குத் துணைக்கருவியாக, வலிமைகொண்ட சேனை யிருக்கிறது என்பது இரண்டாவது காரணமாயிருக்கலாம். இந்தியர்கள் ஒற்றுமையின்றி, பலவீனர்களாயிருக்கின்றார்கள் என்பது மூன்றாவது காரணமாயிருக்கலாம். கடைசிக் காரணம் தான் முதல் இரண்டு காரணங்களுக்கும் இடங்கொடுக்கின்றது. இந்தியர்கள் சுயராஜ்யம் பெறும் வரையில், இந்த அவமானக் குறிப்புக்கும் இகழ்வுக்கும் [illegible] கொடுக்காமலிருக்க முடியாது. எனவே, இதைப்பற்றி தேசபக்தர்கள் ஆத்திரப்படுவதில் பொருள் உண்டு; ஆனால் பயனில்லை. நாட்டின் பொதுவான அவமானத்தை நீக்க முயற்சி செய்யாமல் தேசபக்தர்கள் ஆத்திரப்பட்டால் மட்டும் போதுமா? ஆத்திரப்படுவது, நமது பலவீனத்தை உறுதிப்படுத்தும். அவ்வளவுதான்.

"ஆங்கிலேயர்கள் இந்த நாட்டுக்கு வந்தகாலையில் அவர்கள் தங்களுடன், பிடிவாதம், நேர்மை, செயல் திறன் என்ற முக்குணங்களைக் கொண்டு வந்தார்கள்" என்று திரு. ஜேம்ஸ் அவர்கள் கூறுகின்றார். இந்தக்கூற்று சரித்திர ஆராய்ச்சிக்கு முன்னர் ஒரு கணங்கூட நிலைத்து நிற்காது. இந்தியாவில் ஆங்கில ஆட்சியை நிலைக்கவைத்தவர் கிளைவ் பிரபு அவர்கள். அவருக்கு "பிளாஸி வீரன்" என்ற புகழுரைப் பட்டம் உண்டு. ஆனால் அவர் பொய்க் கையெழுத்து இட்ட சங்கதியும் சரித்திரப் பிரசித்தியான விஷயமாகும். சந்ததியில்லாமல் இறந்த சுதேச மன்னர்களின் சமஸ்தானங்கள் கிழக்கு இந்தியா கம்பெனியாரைச் சேர்ந்தது என்று திட்டம் செய்த கவர்னர் ஜெனரல் அவர்களின் மனப்பான்மை நேர்மை கொண்டதா? உதாரணங்களை என் பெருக்கவேண்டும்? இந்தியாவுக்கு வந்த ஆங்கிலேயர்களின் பிடிவாதத்தையும் நேர்மையையும் நம்மால் புகழமுடியாது. ஆனால் ஆங்கிலேயர்களின் செயல் திறனை ஒப்புக்கொள்ளுகின்றோம். குளிர் நாட்டில் வசிப்பவர்களாதலாலும், திட்டமான அறநெறி அவர்களிடம் இல்லாமையாலும், ஆங்கிலேயர்கள் செயலில் தயங்குவதில்லை. மேலும், அந்நிய நாடுகள் சம்பந்தப்பட்டவரையிலும், ஆங்கிலேயர்களின் "அறப்பான்மை" வேறு. அது பெரும்பாலருக்குத் தெரிந்திருக்கலாம்.

ஜனநாயக ஆட்சியில் திரு. ஜேம்ஸ் அவர்களுக்குப்பற்று இல்லையாம்! இந்தியாவில் வசிக்கும் ஆங்கிலேயனுக்கு, அவன் இந்தியாவிலிருக்கும் வரையில், ஜனநாயக ஆட்சியில் பற்று இருப்பதில்லை. இதற்குக் காரணம் தேடுவது அருமையல்ல. அவர்கள் ஜனநாயக ஆட்சிமுறையை ஏற்றுக்கொண்டால், எஜமானர்களாக இந்த நாட்டில் வாழமுடியுமா? மேலும், அவர்கள் பேரிலும் தவறு இல்லை. சாதாரண ஆங்கிலேயனைக் கூடக் கும்பிடும் இந்தியர்கள் ஆயிரக்கணக்கில் இருக்கும்பொழுது, அவர்களுக்கு ஜனநாயக ஆட்சியில் எவ்வாறு பற்று உண்டாகும்? இந்தியர்களின் தவறான மனப்பான்மையின் காரணமாக, இந்தியாவில் வசிக்கும் ஆங்கிலேயர்களும் ஆங்கில நாட்டில் வசிக்கும் ஆங்கிலேயர்களும் தங்களைப் பற்றியும் பொதுவாக மனிதர்களைப்பற்றியும் தத்துவங்களைப் பற்றியும் தவறான எண்ணங்கொண்டு வாழ்கின்றார்கள். இந்தியர்கள் தங்களைத் திருத்திக்கொண்டால், ஆங்கிலேயர்கள் தாமே திருந்திவிடுவார்கள். எனவே மாற்று நமது கையிலிருக்கிறது. வேறு எவரிடமும் இல்லை.



# முற்றும் சரி.

தனவைசிய ஊழியர் சங்கத்தின் ஒரு தீர்மானம்பற்றிச் சில அன்பர்கள் உளத்தில் ஐயம்தோன்றியிருப்பதாக அறிகிறோம். அவ் ஐயத்தைக் களைதல் நமது கடன் என்றும் கருதுகின்றோம். எனவே, அத்தீர்மானத்தையும் அதன் நோக்கத்தையும் சிறிது ஆராய்வோம்.

பெண்ணுக்குப் பணங்கொடுத்துச் செய்யப்படும் மணத்தில் தனவைசிய ஊழியர் சங்கத்தார் கலந்துகொள்வதில்லை என்பது அத்தீர்மானம். சமீபத்தில் அமராவதி புதூரில் ஒரு கலப்பு மணம் நடந்தது. அம்மணம் பெண்ணுக்குப் பணங்கொடுத்தே செய்யப்பட்டதென்பது உண்மை. பணங்கொடுக்கவில்லையென்று பொய்ச் சத்தியம் செய்ய, இம்மணத்தில் சம்பந்தப்பட்ட எவரும் தயாராகவிருக்கமாட்டார் என்பதைத் தனவணிக மக்கட்கு அறிவுறுத்தல் அவசியம். பணங்கொடுத்துச் செய்யப் பெற்ற இம்மணத்திற்கு ஊழியர் சங்க அங்கத்தவர் பலர் போனதும் உண்மைதான். ஏன்? இம்மணம் பேசி முடித்ததில் முன்னின்றவர் ஊழியர் சங்க அங்கத்தவரே. இது தீர்மானங்கடந்த செயலா என்பதே கேள்வி. மேலெழுந்தவாரியாக நோக்குவோர், ஆம் என்று கூறலாம். தீர்மானத்தின் உள்ளக்கிடக்கை அறிந்த அறிஞர் அவ்வாறு கூறார் என்று நாம் கருதுகிறோம்.

வேண்டுமென்றே ஊழியர் சங்கத்தைக்குறைகூறித் திரியும் வீணர்கட்கு நாம் இங்கு விடையளிக்கவில்லை. அவரைப்பற்றி நமக்குக் கவலையில்லை. சங்கத்தீர்மானத்தைச் செவ்வனே உணராமல் அமராவதிபுதூர் மணத்திற்குச் சென்றது பிழையெனச் சில மெய்யன்பர்களும் கருதுவதைக் காண்கின்றோமாதலின், அவர் ஐயந்தீர நாமறிந்த அளவில் இடம் நோக்கிச் சிறிது சுருங்கவே செப்புவோம்.

இம்மணத்திற்கு ஊழியர் சங்க அங்கத்தவர் சென்றது முற்றும் சரி என்பதே நமது கருத்து. சென்றது சரி என்பதோடமைய நாம் விரும்பவில்லை. பணம் கொடுத்ததைக் காரணமாகக்கொண்டு செல்ல மறுத்திருப்பாரேல், அவர் அத்தீர்மானத்தின் நோக்கத்தை அறியவில்லை யென்றும் தங்கள் கடமையை உணரவில்லையென்றும் துணிந்து கூறுவோம்.

என் நோக்கங்கொண்டு ஊழியர் சங்கம் இத்தீர்மானம் செய்தது? பெண்ணுக்குப் பணங் கொடுத்தல் பாபம் என்ற காரணங்கொண்டா? அன்று! அன்று!! அது பாபமானால் அதைவிடக் கொடியபாவம் எத்தனையோஉள. அவற்றிற்கெல்லாம் ஊழியர் சங்கத்தில் தீர்மானங்கள் உளவோ? இல்லை; இல்லை. சமூகத்தில் பெண்ணுக்குப் பணங் கொடுக்கும் காரணத்தால், ஏராளமான மக்கள் மணமின்றி வருந்துகின்றார்கள் என்பதை எண்ணி, அதன் பொருட்டே இத்தீர்மானம் செய்யப்பட்டது. ஊழியர் சங்க நோக்கத்தில் முதன்மையாக மண விஷயத்தைக் குறித்திருப்பதை அன்பர்கள் காணலாம். இப்பொழுது இத்தீர்மானம் ஏன் செய்ததாக ஏற்படுகின்றது? சமூகத்தில் பெண்ணுக்குப் பணங் கொடுப்பது ஒழிந்தாலன்றி எல்லோர்க்கும் மணம் ஆகாது என்பதற்காகவே இத்தீர்மானம் செய்ததாக ஏற்படுகின்றது.

ஈண்டு நடந்த கலப்பு மணம் போன்ற மணத்தால் தனவணிக சமூகத்தில் உள்ள [illegible] குறையுமா? அன்றோ? மணமிலா வாழ்க்கை வாழும் தனவணிக மக்களை யெல்லாம் மணமிட விரும்பும் தனவைசிய ஊழியர் சங்கத்தார்க்கு இத்தகைய கலப்பு மணங்கள் பெரிதும் அரண்செய்வன அன்றோ? பெண்ணுக்குப் பணங்கொடுக்கும் காரணங்கொண்டு இன்னோரன்ன மணங்களை வெறுத்தல் ஆமோ? பெண்ணுக்குப் பணங்கொடாமல் நடந்தால் நல்லதுதான். வேறுவகுப்பில் மணம் நேரும் பொழுது சிறுதொகையுமின்றி இசைவது அசாத்தியமாயின், அதனைப் பொருட்படுத்தலாகாது. இத்தகைய மணங்கள் பல நடக்குமானால் சமூக மணத்துன்பம் ஒழியுமென்று கருதி, இதில் தலைப்பட்டது ஊழியர் சங்க அங்கத்தவரின் அறிவுடைமையையே காட்டுகின்றது. இம்மணத்திற்குச் சென்றது தீர்மானத்திற்குச் சிறிதும் முரணன்று.

இதனால் தனவைசிய சமூகத்தில் நடைபெறும் பெண்ணுக்குப் பணங் கொடுக்கும் மணங்கட்கு இவ்வன்பர்கள் சென்று விடுவார்கள் என்று எவரும் எண்ண வேண்டுவதில்லை. அதற்கு இவர்கள் செல்லப் போவதில்லை. தனவைசிய ஊழியர் சங்கம் தனவைசிய சமூக சம்பந்தமானது. அச்சங்கத்தீர்மானம் தனவைசிய சமூக அளவையேகட்டுப்படுத்தும். அதில் பெண்ணுக்குப் பணங் கொடுக்கும் மணத்திற்குப் போகக் கூடாது என்ற தீர்மானம் அச்சமூகத்துள் பெண்ணுக்குப் பணங்கொடுத்தலையே குறிக்கும். நிற்க,

தனவைசிய ஊழியர் சங்கத்தார் சில ஆண்டுகள் முன்னர், தாங்களே அரிதின் முயன்று செய்த சில மணங்களை ஈண்டு நினைவிற்குக் கொணர்வோம். அம்மணங்களும் செலவுக்குச் சில தொகை கொடுத்துத்தான் செய்யப்பட்டது. இது தவறானால் அது தவறன்றோ? இதுவும் தவறன்று. அதுவும் தவறன்று. அன்றும் நோக்கத்திற்கு—தீர்மானத்திற்கு முரணில்லாமலேயே, ஊழியர் சங்கத்தார் நடந்துகொண்டனர். இன்றும் அவ்வாறே அவ் அங்கத்தவர் நடந்து கொண்டிருக்கிறார். அன்றி,

இப்பொழுது நடாத்திய மணத்திற்கு உரியவரின் உறவு கொண்டோ உரிமை கொண்டோ, எவரும் போனதாகக் காணவில்லை. கொள்கைக்கு மாறுபடும் இடத்தில் உறவும் பிறவும் அணுவுக்குச் சமம் ஊழியர் சங்கத்தார்க்கு என்பது உலகம் அறிந்தது. இம்மணத்திற்கு அவர்கள் சென்றது கொள்கை கொண்டே. எனவே இது முற்றும் சரி என்று மீண்டும் உரைப்போம். இதுபற்றி அன்பர் எவர்க்கும் ஏதும் இன்னும் ஐயமிருப்பினும், நமது பத்திரிகைக்கு நேரே எழுதுவாராயின் விடையிறுக்கக் கடமைப்பட்டிருக்கிறோம்.

# இடிமுழக்கம்.

### சம்பந்தமில்லை.

சில கிழமைகள் முன்னர் "பொய்ப்பிரசாரம்" என்னும் கட்டுரையொன்று நமது ஊழியனில் வெளிப்போந்ததை அன்பர்கள் படித்திருக்கலாம். அதில் சிலவற்றிற்கு மறுப்பென்று "பகிரங்கக் கடிதம்" என்ற பெயரோடு ஒரு அன்பர் நமக்கு எழுதிய ஒன்று பதின்மூன்றாம் பக்கத்தில் வெளிவந்திருக்கின்றது. முதற் கட்டுரைக்கும் இதற்கும் சம்பந்தம் இருப்பதாக நாம் உணர முடியவில்லை. பகிரங்கக்கடிதம் எழுதிய நண்பரை நாமறிவோம். அவர் நல்லவர்; ஆனால் அவர் எழுதியிருப்பதில் பொ[illegible]வில்லை யென்[illegible] கூறாதிருக்க முடியவில்லை. நமது கூற்றுக்கும் அவர் கூற்றுக்கும் தொடர்பு இல்லையென்பதை விளக்கி அடுத்தகிழமை வரைவோம்.

### இளைஞர் மகாநாடு.

இரங்கூனில் தைத்திங்கள் நான்காம் நாள் தனவைசிய இளைஞர் மகாநாடு ஒன்று நடைபெறப்போவதாக அறிகிறோம். இம் மகாநாடு தைப்பூசத்தை ஒட்டி நடைபெறுவதால் இரங்கூனை அடுத்த பசுமக்தானில் நடைபெறக் கூடும். இம் மகாநாட்டிற்குப் பர்மாவிலுள்ள தனவணிக இளைஞர் அனைவரும் போந்து வேண்டுவசெய்தல் கடன். இம்மகாநாட்டிற்குத் தலைமை வகிக்க நமது பெரும்பேரன்பர் பிச்சப்பா சுப்பிரமணியன் அவர்கள் இசைந்துள்ளார்கள் என்ற நற்செய்தியை அன்பர்கட்கு அறிவிக்கின்றோம். தலைமைப் பீடத்தில் தகுதிவாய்ந்த நமது அன்பரை நிறுத்திய அறிஞர்களைப் போற்றுவோம். தலைவருடன் இவ்வூர் அன்பர் அழ. ராம. அழகப்ப செட்டியாரவர்களும் கல்லுப்பட்டி அன்பர் ராம. கருப்பன் செட்டியாரவர்களும் போதருவார்களென்று அறிகின்றோம். அன்பர்கள் பிரயாணமும் இளைஞர் மகாநாடும் இனிது நடக்கேறுக.

### ஆயுள் சந்தா.

பத்திரிகைகட்கு ஆயுள் சந்தா வாங்கும் முறையைப் பல பத்திரிகைகள் கையாள்கின்றன. இதில் ஒரு சந்தேகம் சில ரிடையே உண்டாயிருப்பதாக நமது மெய்யன்பர் ஒருவர் கடிதம் எழுதியுள்ளார். அதன் முடிவை எல்லோருக்கும் அறிவித்தல் நமது கடனே. மற்ற பத்திரிகைகளைப் பற்றி நமக்குத் தெரியாது. நமது பத்திரிகை சம்பந்தப்பட்டவரை, நாம் கூறுவோம். "ஆயுள் சந்தா" வாங்குவது பத்திரிகை ஆயுள்வரையுமா, சந்தாதார் ஆயுள்வரையுமா என்பதேகேள்வி. பத்திரிகை ஆயுள்வரை என்றே நாம் வைத்திருக்கிறோம். அதுவே முறை. பத்திரிகை என்றும் இருக்கும். பத்திரிகை உள்ளவரை ஆயுள் சந்தாக்கட்டியவர் சந்ததியார்க்குப் பத்திரிகை அனுப்பிக் கொண்டுவருதலே ஒழுங்கு. மனிதர்கள் காலஞ்சென்றவுடன் அவர் ஆயுள்சந்தாக்களாகக்கட்டிய பணங்களை ஆதாயத்தில் சேர்த்துக்கொண்டு பத்திரிகையைநிறுத்திவிடுதல் சரியன்று. நமது பத்திரிகை அதன் ஆயுள்வரை ஆயுள் சந்தாதாரர்களின் சந்ததியார்க்கு வந்து கொண்டிருக்கும் என்று அறிவித்துக்கொள்கிறோம்.

### தக்கவிடை.

ஐரோப்பிய சங்கத்தலைவர் திரு. லாங்பர்ட் ஜேம்ஸ் பேசியது எந்த உண்மை இந்தியனுக்கும் மனவருத்தத்தைத்தான் தரும். வங்காள சட்டசபையில்சுயாராஜ்யக்கட்சித்தலைவரும், கல்கத்தா நகரசபைத் தலைவருமான திரு. சென்குப்தா அவர்கள் அஸோஷியேடட் பிரஸுக்குப் பேட்டி, கொடுத்துப் பேசிய பொழுது, திரு. லாங்பர்ட்ஜேம்ஸுக்கு ஒரு எச்சரிக்கை செய்திருக்கிறார். "இந்தியாவில் உள்ள ஐரோப்பியர் மொத்தத்தில் இரண்டரை அல்லது மூன்று லட்சம் பேர் இருக்கிறார்கள் என்ற சாதாரண உண்மையை அவர்கள் மறந்துவிடக் கூடாது" என்று எடுத்துக்காட்டி, "அவர்கள[illegible] திண்டாட்டமான நிலைமையை அவர்கள் உணரச் செய்யத்தக்க தொந்தரவை அவர்களுக்குச் [illegible] பத்துலட்சம் மனிதர்கள் போதும்" என்று கூறியிருக்கிறார் திரு. சென்குப்தா. ஆனால், இந்தியர்கள் பலாத்காரத்தில் இறங்கமாட்டார்களென்பதையும் திரு. சென்குப்தா விளக்கியிருக்கிறார்.

### தேசபக்தர் உயிர் நீத்தார்.

சென்ற "வைகுண்ட" ஏகாதசியன்று, தூத்துக்குடி வக்கீல் சங்கத்தின் தலைவரான திரு. என். டி. கிருஷ்ண அய்யங்கார் அவர்கள் திடீரென, நாடக மேடையில், காலஞ்சென்ற கவி சுப்பிரமணிய பாரதியாரின் தோத்திரப் பாடல்களைப் பாடிக்கொண்டிருக்கையில், மார்பு அடைத்து இறந்து போனார். ஸ்ரீமான் அய்யங்கார் அவர்களைத் தமிழ் நாட்டில் பலருக்குத் தெரியாமலிருக்கலாம். பாரதியாரின் பாடல்களை செவ்வனே, உருக்கத்துடன் பாடக்கூடியவர்களில் ஒருவர் காலஞ்சென்ற அய்யங்கார் அவர்கள். வங்காளப் பிரிவினை தொட்டு, அவர் தேசபக்தியில் இம்மியளவும் குன்றாமல், நாட்டுக்காக உழைத்தவர். ஒத்துழையாமையை முன்னிட்டு, தமது வக்கீல் தொழிலை இரண்டு ஆண்டுகளுக்கு அதிகமாக நிறுத்திவைத்திருந்தார். [illegible] ஆண்டுகளில், தூத்துக்குடியில் தோன்றிய சுதேசி ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனிக்காக, ஸ்ரீமான் வ. உ. சிதம்பரம்பிள்ளை அவர்களுடன் உழைத்து, மிகுதியான சிரமத்தை மேற்கொண்டார். அந்தக் காலந்தொட்டு, ஆடம்பரமின்றி, இயன்ற வகைகளில், நாட்டுக்கு ஸ்ரீமான் அய்யங்கார் அவர்கள் தொண்டுபுரிந்து வந்தார். அவரது குடும்பத்தாருக்கு நமது அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

### சட்டசபைத் தலைமை.

தேர்தலுக்குப் பின்னர், சென்னை சட்டசபை, முதன் முதலாக டிசம்பர்மீ கசஉ கூடிற்று. சட்டசபைத் தலைவரைத் தெரிந்தெடுப்பது சபையின் முதல் வேலையாகும். சுயராஜ்யக்கட்சியின் தலைவர் திரு. ஸி. வி. எஸ் நரசிம்ம ராஜு அவர்கள் போட்டியின்றியில், சட்டசபைத் தலைவராகத் தெரிந்தெடுக்கப்பட்டார். போட்டியின்றியில் தலைவர் தெரிந்தெடுக்கப் பெற்றதைப் பற்றி நமக்கு மகிழ்ச்சிதான். ஆனால் சுயராஜ்யக்கட்சியின் தலைவர், சட்டசபைத்தலைமைப் பதவிக்கு வந்திருக்கலாகாது என்பது நமது ஆட்சேபம். தேர்தலில் பெரும்பான்மை கொண்ட கட்சியின் தலைவர் முதல் மந்திரியாவது பொறுப்பாட்சியுள்ள நாடுகளில் இருக்கும் வழக்கமாகும். கட்சித்தலைவர் சபைத்தலைமைப் பதவிக்கு விரும்பம் கொள்வது, கட்சி யாட்சிக்கு இசைந்த முறையல்ல. மந்திரிப் பதவியை ஏற்காத சுயராஜ்யக்கட்சியார் தமது தலைவரை [illegible]ஸ்தானத்துக்கு அனுப்பியது எக்காரணம் பற்றியோ, அதை நாம் அறியக்கூடவில்லை. இதுவரையிலும் சுயராஜ்யக்கட்சியை நடத்திவந்த ஸ்ரீமான் ராஜு அவர்களுக்கு இனி அக்கட்சியை நடத்த முடியாது என்று புதிய "சுயராஜ்ய" அங்கத்தினர்கள் கண்டுகொண்டார்களா? ராஜு அவர்கள் சட்டசபைத் தலைவரானதற்கு, இதுவரையிலும் வெளிப்படையாகக் காணக்கூடாத ஒரு காரணம் இருக்கவேண்டும். அதுபோகப் போகத் தெரியும்.

## மூன்றும் பாகம்.

### அத்தியாயம் உ.

இரண்டு கப்பல்களும் தர்பான் துறைமுகத்தில், டிசம்பர் மாதம் கஅ-ம் தேதி சுமாருக்கு நங்கூரம் பாய்ச்சின என்பதில் நிறுத்தியிருந்தோம். வைத்தியர்களால் நன்கு பரிசோதிக்கப் பெற்றாலொழிய, தென்னாப்பிரிக்காவின் எந்தத்துறை முகப்பட்டினங்களிலும் இறங்குவதற்குப்பிரயாணிகள் எவரும் அனுமதிக்கப்படுவதில்லை. தொத்து நோய் கண்டிருக்கும் பிரயாணி ஒருவர் கப்பலில் இருந்தால், அது சிறிது காலம் (குவாரண்டைனில்) ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கும். நாங்கள் புறப்படுகையில், பம்பாயில் பிளேக் இருந்ததால், எங்கள் கப்பலும் சிறிது காலம் குவாரண்டைனில் இருக்க வேண்டிவரும் என்று நாங்கள் பயந்தோம். பரிசோதனை நடைபெறு முன்னர், ஒவ்வொரு கப்பலும் மஞ்சள் கொடியைப் பறக்கவிட வேண்டும். கப்பலிலிருக்கும் பிரயாணிகள் அனைவரும் தேக சுகத்துடனிருக்கின்றார்கள் என்று டாக்டர் நற்சாட்சிப்பத்திரம் கொடுத்த பின்னரே, மஞ்சள் கொடியை எடுத்துவிட முடியும். மஞ்சள் கொடி தாழ்த்தப்பட்ட பிறகுதான், பிரயாணிகளின் நண்பர்களும் உறவினர்களும் கப்பலுக்குவரலாம்.

வைத்தியர் வந்து, எங்களைப்பரிசோதிக்கையில், எங்கள் கப்பலும் மஞ்சள் கொடியைப் பறக்கவிட்டது. பிளேக் பூச்சிகள் வளர்ச்சி பெறுவதற்கு இருபத்து மூன்று நாட்கள் பிடிக்கும் என்பது அவர் கருத்தானதால், எங்கள் கப்பல் ஐந்து நாட்கள் குவாரண்டைனில் இருக்க வேண்டும் என்று அவர் உத்தரவிட்டார். பம்பாயை விட்டுப்புறப்பட்டு இருபத்து மூன்று நாட்கள் முடியும் வரையில், எங்கள் கப்பல் குவாரண்டைனில் இருக்க உத்தரவாயிற்று. ஆனால் இந்த உத்தரவுக்கு, சுகாதாரமட்டும் காரணமல்ல.

தர்பானிலிருக்கும் வெள்ளைக்குடிமக்கள், எங்களை மீண்டும் இந்தியாவுக்கு அனுப்பிவிட வேண்டுமென்று கிளர்ச்சி செய்து கொண்டிருந்தார்கள். இந்த உத்தரவு பிறந்ததற்குப் பல காரணங்களில் இந்தக் கிளர்ச்சி ஒன்றாகும். நகரத்தில் நாள் தோறும் என்ன நடக்கின்றது என்பதை, தாதா அப்துல்லா கம்பெனியார் எங்களுக்குத் தெரிவித்துக் கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு நாளும், வெள்ளையர்கள் பெருங் கூட்டம் போட்டுக்கொண்டிருந்தார்கள். அப்துல்லா கம்பெனியாரைப் பல வகைகளில் அவர்கள் பயமுறுத்திப் பார்த்தார்கள். இலஞ்சம் கொடுப்பதாகவும் சொன்னார்கள். இரண்டு கப்பல்களையும் திருப்பியனுப்பிவிடக் கம்பெனியார் இசைந்தால், அவர்களுக்கு நஷ்டஈடு கொடுப்பதாக வெள்ளையர்கள் சொன்னார்கள். ஆனால் பயமுறுத்துதல்களுக்கு அஞ்சுபவர்கள் தாதா அப்துல்லா கம்பெனியார் அல்ல. அப்பொழுது கம்பெனியை நிர்வாகம் செய்து நடத்திய கூட்டாளி சேத் அப்துல் கரீம் ஹாஜி ஆதம் அவர்கள். துறைமுகத்தில் கப்பல்களை நிறுத்தி, என்ன நேர்ந்தாலும் பிரயாணிகளை இறக்கி விடுவது என்று அவர் தீர்மானம் கொண்டிருந்தார். ஒவ்வொரு நாளும் விவரமான கடிதங்களை அவர் அனுப்பிவந்தார். நல்லவேளையாக, என்னைச்சந்திப்பதற்காக வந்திருந்த காலஞ்சென்ற மன்சுக்லால் நாஸர் அவர்கள் அப்பொழுது தர்பானிலிருந்தார். அவர் திறமையுள்ளவர்; அச்சமில்லாதவர். அவர் இந்திய சமூகத்தாருக்கு வழிகாட்டிவந்தார். இந்தியர்களின் வக்கீல் திரு. லோட்டன் அவர்களும் அச்சமற்றவர். அவர் வெள்ளையர்களின் செயலைக்கண்டித்து—தமது வக்கீல் முறையிலல்ல—அவர்களுடைய உண்மை நண்பனாக, இந்தியர்களுக்கு யோசனை கூறிவந்தார்.

## காந்தியடிகளின் சரிதம்.

### புயல்.

காந்தியடிகள் "நவஜீவன்" பத்திரிகையில் எழுதியது.

இவ்வாறு தர்பன் நகரம் சமபலமில்லாதவர்களின் மல்போர்க்களமாயிற்று. ஒரு பக்கத்தில் சிறு தொகையிரான ஏழை இந்தியர்களும், அவர்களின் அபிமானிகளான ஒரு சில ஆங்கில நண்பர்களும் இருந்தனர்; மற்றொரு பக்கத்தில் வெள்ளையர்கள் இருந்தார்கள். ஆயுத பலத்திலும் தொகையிலும் கல்வியிலும் செல்வத்திலும் அவர்கள் சக்திவான்கள். மேலும், அவர்களுக்கு அரசாங்க ஆதரவும் இருந்தது. ஏனெனின், நேட்டால் அரசாங்கத்தார் அவர்களுக்கு பகிரங்கமாக உதவி செய்தார்கள். மந்திராலோசனை சபையில் மிகுந்த செல்வாக்குப் பெற்ற மந்திரி திரு. ஹாரி எஸ்கோம் அவர்கள் பகிரங்கமாக வெள்ளையர்களின் கூட்டங்களில் கலந்து கொண்டார்.

குவாரண்டைனின் உண்மையான நோக்கம் யாதெனின், பிரயாணிகளையோ ஏஜண்ட் கம்பெனியையோ பயமுறுத்தி, அவர்களை இந்தியாவுக்குத் திரும்பச் செய்வதாகும். இப்பொழுது, எங்களையும் பயமுறுத்த ஆரம்பித்தார்கள். "நீங்கள் திரும்பிப்போகாவிட்டால், நீங்கள் மூழ்கடிக்கப் படுவீர்கள். ஆனால், திரும்பிப்போக இசைந்தால், ஒருக்கால் உங்களுக்குப் பிரயாணச் செலவு கிடைக்கலாம்" என்றார்கள். என்னுடைய சகோதரப் பிரயாணிகளிடம் கலந்து, அவர்களுக்குத் தைரியம் கூறிவந்தேன். "எஸ். எஸ். நாதேரி" கப்பலின் பிரயாணிகளுக்கும் ஆறுதல் செய்தி அனுப்பிவந்தேன். அவர்கள் யாவரும் அமைதியுடனும் தைரியத்துடனும் இருந்தார்கள்.

பிரயாணிகளின் களியாட்டத்திற்காக, கப்பலில் பலவகை விளையாட்டுகளுக்கு நாங்கள் ஏற்பாடு செய்தோம். கிருஸ்மஸ் தினத்தன்று சலூன் பிரயாணிகளைப் கப்பலின் தலைவர் விருந்துக்கழைத்தார். அவர்களில் முக்கியமானவர்கள் நானும் எனது குடும்பத்தாரும். விருந்துக்குப்பின் நிகழ்ந்த சொற்பெருக்குகளில் நான் மேநாட்டு நாகரிகத்தைப் பற்றிப் பேசினேன். யோசனை கொண்ட பேச்சுக்கு இது தருணமல்ல என்று எனக்குத் தெரியும். ஆனால், யோசனையில்லாப் பேச்சைத்தவிர, வேறொன்றும் எனக்குத்தெரியாது. களிப்பில் நான் கலந்துகொண்டேன். ஆனால், எனது உள்ளம் தர்பானில் நடைபெற்று வரும் போராட்டத்திலிருந்தது. ஏனெனின், நான்தான் போராட்டத்தின் உண்மையான இலக்காகும். என்பேரில் இரண்டு குற்றங்களைச் சுமர்த்தினார்கள்.

க. நான் இந்தியாவில் இருக்கையில், தகாதமுறையில், நேட்டால் வெள்ளையர்களைக் கண்டித்ததாக.

உ. நேட்டாலில் இந்தியர்களை ஏராளமாகக் குடியேற்றும்பொருட்டு, வேண்டுமென்றே, இரண்டு கப்பல்கள் நிறையப் பிரயாணிகளை நான் கொண்டுவந்ததாக.

என்னுடைய பொறுப்பு எனக்குத் தெரியும். என் மூலமாக, தாதா அப்துல்லா கம்பெனியார் பெருத்த நஷ்டத்துக்கு உள்ளானார்கள் என்றும் எனக்குத் தெரியும். பிரயாணிகளின் உயிர்கள் ஆபத்திலிருந்தது. என்னுடன் என்னுடைய குடும்பத்தாரையும் கூட்டிவந்ததால், அவர்களையும் நான் ஆபத்துக்குள்ளாக்கினேன்.

ஆனால், நான் முற்றிலும் நிரபராதி. நேட்டாலுக்குப்போக, நான் எவரையும் தூண்டினதில்லை. பிரயாணிகள் புறப்படுகையில், அவர்களை எனக்குத் தெரியாது. இரண்டொரு உறவினர்களைத்தவிர, கப்பலிலிருந்த நூற்றுக்கணக்கான பிரயாணிகளில் ஒருவருடைய பெயர் விலாசமாயினும், எனக்குத்தெரியாது. இந்தியாவிலிருக்கையில், நேட்டாலில் வெள்ளையர்களைப் பற்றி, ஏற்கனவே, நான் சொல்லாத ஒரு வார்த்தையும், நான் சொல்லவில்லை. நான் சொல்லியவற்றிற்கு ஆதாரமாக, என்னிடம் ஏராளமான அத்தாட்சிகளிருந்தன.

நேட்டால் வெள்ளையர்கள் மேநாட்டு நாகரிகத்தின் பயன். அந்த நாகரிகத்தின் பிரதிநிதிகள் அவர்களேயாவர். எனவே, அந்த நாகரிகத்தைப்பற்றி, மனதில் நான் மிகவும் வருந்தினேன். நெடுங்காலமாக, இந்த நாகரிகம் என் மனதிலிருந்துகொண்டு வந்தது. எனவே, அந்தச்சிறு கூட்டத்திற்கு முன், நான் செய்த பிரசங்கத்தில், எனது கருத்துக்களை வெளியிட்டேன். கப்பல் தலைவரும் ஏனைய நண்பர்களும், அதைப் பொறுமையுடன் கேட்டார்கள். எந்த நோக்கத்துடன் சொற்பொழிவு நிகழ்த்தப்பெற்றதோ, அந்த நோக்கத்தில், அவர்கள் அதை ஏற்றுக்கொண்டார்கள். பிரசங்கத்தினால் அவர்களுடைய வாழ்க்கையின் போக்கு மாறிற்றோ என்பது எனக்குத்தெரியாது. ஆனால் பின்னர் கப்பல் தலைவருடனும் ஏனைய உத்தியோகஸ்தர்களுடனும் மேநாட்டு நாகரிகத்தைப்பற்றி, நான் நீண்ட நேரம் சம்பாஷணை செய்தேன். கீழ்நாட்டு நாகரிகத்தைப்போலல்லாமல்,மேநாட்டு நாகரிகம்சிறப்பாகப்பலாத்காரத்தைஅடிப்படையாகக் கொண்டதென்று நான் எனது பிரசங்கத்தில் கூறினேன். கேள்வி கேட்பவர்கள் என்னை நெருக்கினார்கள். அவர்களில் ஒருவர் (கப்பல் தலைவர் என்று எனக்கு ஞாபகம்,) "தங்கள் பயமுறுத்துதல்களை வெள்ளையர்கள் காரியத்தில் காண்பித்தார்கள் என்று வைத்துக்கொள்ளுவோம். அவ்வாறானால், தாங்கள் தங்களுடைய அஹிம்சைக் கொள்கையை எப்படிப்பற்றிக்கொண்டிருப்பீர்கள்" என்று கேட்டார். அதற்கு நான் விடையளித்ததாவது:—

"அவர்களை மன்னித்து, அவர்களை சட்டத்துக்குள்ளாக்காமல், என்னைத் தடுத்துக் கொள்ள வேண்டியதுணிவும் அறிவும் கடவுள் எனக்கு அருளுவாரென நான்நம்புகிறேன். அவர்களிடம் எனக்குக் கோபமில்லை. அவர்களுடைய அறியாமையையும் குறுகிய நோக்கத்தையும் கண்டு, நான் வருந்துகின்றேன். தாங்கள் இன்றைக்குச் செய்வது நேர்மையானதும் சரியென்றும் அவர்கள் உண்மையாக நம்புகிறார்கள் என்று நான் அறிவேன். எனவே, அவர்களிடம் நான் கோபம் கொள்ளக் காரணமில்லை"

கேள்வி கேட்டவர் புன்னகை புரிந்தார். அவர் நான் சொல்வதைச் சந்தேகித்தார் போலும்!

இவ்வாறு, சோர்வுடன் நாட்கள் கழிந்தன. குவாரண்டைன் எப்பொழுது முடிவடையுமென்று தெரியவில்லை. "விஷயம் தம்முடைய கையை விட்டுப்போய் விட்டதென்றும், அரசாங்கத்தாரிடமிருந்து உத்திரவு வந்தவுடன், கீழே யிறங்க எங்களுக்கு அனுமதி தரப்படும்" என்றும் குவாரண்டைன் உத்தியோகஸ்தர் சொன்னார்.

இறுதியில், பிரயாணிகளுக்கும் எனக்கும் இறுதிக் கடிதங்கள் அளிக்கப்பெற்றன. உயிர் பிழைத்து, நாங்கள் தப்பிப்போக வேண்டுமானால், நாங்கள்சரணடைய வேண்டுமென்று கூறப்பெற்றது. நேட்டால் துறைமுகத்தில் இறங்கும் எங்கள் உரிமையை நாங்கள் காத்துக் கொள்வோமென்றும், என்ன நேர்ந்தாலும் நேட்டாலில் நுழைய, நாங்கள் தீர்மானித்துள்ளோம் என்றும் பிரயாணிகளும் நானும் விடையளித்தோம்.

இருபத்து மூன்று நாட்கள் கழிந்ததும், துறைமுகத்தில் நுழைய, கப்பல்களுக்கு அனுமதி கொடுக்கப்பெற்றது. பிரயாணிகள் தரையில் இறங்கலாம் என்ற உத்திரவும் பிறந்தது.

## உள்ளூர்.

| | |
|---|---|
| ரெங்கூன் உண்டியல் வட்டம் | க—0—0 |
| சென்னை உண்டியல் வட்டம் | 0—ரு—0 |
| பவுன் (பொற்காசு) | கரு—கூ—ச |
| பம்பாய் வெள்ளி க00 ரூபாயிடை | இகூ—0—0 |
| ஒருரூபாயிடை | 0—க0—0 |

ஹிந்து மதாபிமான சங்கம்:—இம்மதி ரு-ம் தேதி (உ0-கஉ-உக) திங்கட்கிழமை மாலை ச மணிக்கு ஸ்வாமி விவேகாநந்தரது பிறந்த தினக்கொண்டாட்டம் நடைபெற்றது. அவ்வமயம் ஆரணி "சுகோதயம்" பத்திராதிபர் ஸ்ரீமான் வி. என். அரங்கசாமி ஐயங்காரவர்கள் தலைமையில் "குமரன்" உதவிப் பத்திராதிபர் ஸ்ரீமாந் பி. ஸ்ரீ. ஆச்சாரியாரவர்கள் "விவேகாநந்தர் வாழ்க்கையும் உபதேசமும்" என்ற பொருள்பற்றி சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

ஸ்ரீ மீனம்பிகா பந்தடிமால்:—முத்துப்பட்டணம் ஸ்ரீ மீனம்பிகா பந்தடிமாலின் சார்பாக சில அன்பர்களின் பொருளுதவி கொண்டு, நாளிது மார்கழித்திங்கள் முதலாம் நாள் துவாதசி திதியும் கார்த்திகை நட்சத்திரமுமான படியால், காலை சுமார் கூ-மணிக்கு பந்தடிக்கு மிடத்தில் ஆதித்திராவிடமக்கள் முதலிய பல திறமக்களுக்குமாக சுமார் ஆயிரம் பேர்களுக்கு 'மகேசுரபூஜை' அன்னமளித்தார்கள்.

ஒரு பொதுக்கூட்டம்:—அப்பால் 'திருநாவுக்கரசர் கழகச்' சார்பாக ஸ்ரீ மீனாட்சியம்மன் கோவிலில் மாலை சமணிக்கு திருவாளர் பெரி. நா. நா. அண்ணாமலைச் செட்டியாரவர்களின் அக்கிராசனத்தின் கீழ் கோட்டாறு தசாவதானம் திரு. ஆறுமுகம் பிள்ளை மேற்கண்ட இரு சபைகளுக்கும் வாழ்த்துக் கூறுமுகத்தான் இனிய சுவையுடன் 'வாழ்த்துப் பஞ்சமம்' என்ற ஐந்து கவியையுங்கூறி, அக்கிராசனர் அண்ணாமலைச் செட்டியாரவர்களால் இயற்றப்பெற்ற வாழ்த்துப்பாவையுங்கூறி, அவைக்கு விரிவுரையுங்கூறி, நீண்டதோர் பிரசங்கமும் செய்தார். அதன்பிறகு திரு. ஆவி. லெ. அருணாசலச் செட்டியாரால் "வாலிபர்களின் முன்னேற்றம்" என்னும் விஷயம் உபந்யசிக்கப்பெற்று, சபையின் சார்பாக காரியதரிசிகள் வாழ்த்துக்கூற புஷ்ப சந்தனாதிகள் வழங்கச் சபையினிது நிறைவெய்தியது.

கம்பியில்லா இயந்திரங்களின் மூலம் படங்களையும் அனுப்புவது சாத்தியமே என்பதை, லண்டனில் திரு. தோர்ன் பேக்கர் என்பவர் செய்து காட்டினாராம். ஒரு அறையின் ஒரு மூலையில் ஒரு இயந்திரமும், இன்னொரு மூலையில் இன்னொரு இயந்திரமும் வைக்கப்பட்டன. அவற்றில் ஒன்றில் ஒரு படத்தை வைத்து, அதை இயக்கினார். இப்படம் மற்ற இயந்திரத்தில் வைக்கப்பட்டிருந்த கடிதத்தில் சரியாக விழுந்தது.



## வெளிநாடு.

பிரிட்டிஷ் பார்லிமெண்ட் கூட்டம் கலைந்து, பிப்ரவரி-மீ அஉ-க்கு அடுத்த கூட்டம் ஒத்திப்போடப் பட்டிருக்கிறதாம்.

* * *

பிரிவி கவுன்ஸில் நீதிபதிக் கமிட்டி மசோதா, காமன்ஸ் சபையின் இந்தக் கூட்டத்தில் அநேகமாக நிறைவேறுமெனத் தாம் கருதுவதாக, திரு பால்ட்வின் கூறினாராம்.

* * *

பிரிட்டிஷ் ஆகாய மந்திரி ஸர் ஸாமுவேல் ஹோர் டிசம்பர்-மீ உஎ-உ இங்கிலாந்திலிருந்து புறப்பட்டு, டில்லிவந்து சேருவாராம். இந்தியாவுக்கு ஆகாயப்போக்குவரத்துத் திறப்புவிழாவாக இது நடக்கும் எனப் படுகிறது.

* * *

மாண்டலேச் சிறையில் வைக்கப்பட்டிருந்த அரசியற் கைதி திரு. சுபாஷ் சந்திர போஸ் தேக நிலைமையைப் பரிட்சிப்பதற்காக ரங்கூன் இட்டுச் செல்லப்பெற்றிருக்கிறாராம். பரிட்சை முடிந்ததும், திரும்ப மாண்டலே கொண்டுசெல்லப்படுவார் என்று தெரிகிறது.

* * *

நிலக்கரித் தொழிலாளரில் பல ஜில்லாக்களில் புதிய எட்டுமணிநேர வேலை முறைப்படி வேலை செய்வோர் எண்ணிக்கை ச,இகூ,கசச என்றும், ஏழரைமணி முறைப்படி வேலை செய்வோர் உ,கூகு,கு0 பேர் என்றும், சில ஜில்லாக்களில் ஏழு மணி வேலை நேரமும் இருப்பதாகவும், சுரங்க மந்திரி காமன்ஸ் சபையில் கூறினாராம்.

* * *

காமன்ஸ் சபையில் திரு. லான்ஸ்பரியால் கேட்கப்பட்ட ஒரு கேள்விக்கு, ஹைதராபாத் அரசாங்கத்தில் சில இந்தியர்களுக்குப் பதிலாக ஐரோப்பியர்களைச் சில உத்தியோகங்களில் நியமிப்பதற்கு முன் விசாரணைக்கமிஷன் ஒன்று நியமிக்கும் ஏற்பாடு ஒன்றும் இந்திய கவர்ன்மெண்டார் சொல்லவில்லை யெனப் பதிலளிக்கப்பட்டதாம்.

* * *

இதாலி ஆசாரச் சீர்திருத்தக்கட்சியைச் சேர்ந்த வீன்யர் நூரதி என்பவர், டிசம்பர்-மீ எஉ, இன்னும் எழுவருடன் ஒரு தோணிப் படகில், நள்ளிரவில் பிரான்ஸைச் சேர்ந்த நைஸ் என்னுமிடத்திற்கு ஓடிவிட்டாராம். பேட்டிகண்டு கேட்டதில், இதாலியில் தற்பொழுது நடப்பது அக்கிரமமென்றும், அநேக ராஜீயவாதிகள் போனவிடம் தெரியவில்லை யென்றும் அவர் கூறினாராம்.

* * *

லண்டனிலுள்ள ஸெயின்ட்பால் மாதா கோவில் கோபுரம் ஒரு அங்குலத்தில் நூற்றில் ஒரு பாகம் சாய்ந்திருப்பதாகவும் அந்த கோபுரம் உரு நிமிஷங்களுக்குள் விழுந்து விட்டாலும் விழலாம், அல்லது உரு ஆண்டுகள் இன்னும் நின்றாலும் நிற்கலாம்என்றும், அதற்குள் நுழைதல் எப்பொழுதும் ஆபத்தே யென்றும் லண்டன் நகர மாஜிஸ்ட்ரேட் ஸர்வேயர் ஒருவர் எச்சரிக்கை விடுத்திருக்கிறாராம்.

* * *

அமெரிக்க ஐக்கிய மாகாணத்தில் உள்ள ஹட்ஸன் நதிக்கு, வாஷிங்டன் ஹெயிட்ஸ் என்னுமிடத்திற்கும் ஜெர்ஸி பக்கத்திலுள்ள கோட்டைக்கும் ஒரு தொங்குபாலம் கட்ட ஏற்பாடாகியிருக்கிறதாம். உலகத்திலுள்ள தொங்கு பாலங்களுளெல்லாம் அதுவே பெரியது எனப்படுகிறது. அதைக் கட்ட கு-கோடி டாலர் (ஒரு டாலர் ஏறக்குறைய மூன்றரை ரூபாய்க்கு சமம்) களும் ஐந்து ஆண்டுகளும் ஆகுமாம்.

* * *

மோட்டார் இயந்திரம் அமைக்கப்பெற்ற கூ0 ஆயிரம் டன்கள் நிறைகொண்ட ஒரு புதிய இதாலிய யுத்தக்கப்பல், ஸெண்டிரி பொனின்டீ என்னுமிடததில் கடலில் மிதக்கவிடப்பெற்ற பொழுது, சீனியர் முஸ்ஸோலினியின் மகள் எட்டா என்பவள் அதற்குப் பெயர் அளித்தனளாம். மோட்டார் அமைக்கப்பெற்ற கப்பல்களுள் உலகத்தில் உள்ள யாவற்றிலும் இதுவே பெரியது எனப்படுகிறது.

பர்மாவுக்கும் சீயாமுக்கும் போடப்போகும ரயில்பாதைக்கு அதன் எஞ்சினீர் ஒரு படம் தயார் செய்துளாராம். இந்தப் பாதை கககூக-ம் ஆண்டில் போட்டுமுடியும் எனப்படுகிறது.

* * *

சமீபத்தில் அயர்லாந்தில் சிறைச்வறிய அவசரச்சட்டத்தின் கீழ்க்கைதியானவர்கள் யாவரும் நிர்வாக சபையின் உத்திரவின் பேரில் விடுதலை செய்யப் பெறுவர் என்று ஓர் செய்தி கூறுகிறது.

* * *

ஜாவாவின் வடமேற்குப் பாகத்தில் ககூ பூகம்பங்கள் ஏற்பட்டன. ஆனால், ஒன்றில் மட்டிலுமே கடுமையான சேதம் ஏற்பட்டது. ஐரோப்பியர் பலருடைய வீடுகளும், சுதேசிகளது பல குடியிருப்புக்களும் சேதப்பட்டன எனப்படுகிறது.

* * *

லண்டன் கப்பல் தொழிலாளரது தேசிய சங்கம் அரசியல் ஸ்தாபனங்களோடு சேராதிருக்கலாமா என்பது பற்றி வாக்கு எடுக்கப்பட்டதாம். சேர்ந்திருக்கக்கூடாதென முடிவு ஏற்பட்டதாம். எனவே. அச்சங்கம் தொழிற் கட்சியை விட்டுப்பிரிந்து போகும் எனப்படுகிறது.

* * *

இந்தியாவுக்கு அரசியல் சீர்திருத்த ராயல் கமிஷன் நியமனத்தை ககஉக-ம் ஆண்டுக்கு முன்னதாகவே நியமிக்கும் விஷயம், ஏர்ல்வின்டர்ட்டன் இந்தியாவினின்றும் அனுப்பும் இரகசிய அறிக்கைகளையே பொறுத்திருக்கிறது என "இங்கிலீஷ்மான்" பத்திரிகையின் லண்டன் நிருபர் கூறுகிறார்.

* * *

சீனாவைச் சேர்ந்த ஹாங்கொங்கில் இப்பொழுது நிலைமை அமைதியாக இருக்கிறதாம். என்றாலும், பொதுவேலை நிறுத்தம் தற்காலத்திற்கு மட்டுமே நின்றிருப்பதாக பயப்படப்படுகிறதாம். கீற்காண்டன்காரர்கள் பல விடங்களைப் பிடித்துக்கொண்டதாகவும், ஷாங்கைக்கு இருபதுமைல் தூரத்திலிருப்பதாகவும், ஷாங்கையை நோக்கியும் செல்லத்தயாராகிக் கொண்டு வருவதாகவும் ஒரு செய்தியில் காணப்படுகிறது.

* * *

பிரிட்டிஷ் பிரதம மந்திரி திரு. பால்டுவின் திரு. மார்ஷல்லைக் என்பவருக்கு எழுதியுள்ள கடிதத்தில், பொது உடைமைக் கட்சியாரின் 'தொழில் அமைதியின்மையை உண்டாக்கவும் தொழிலாளரைப் புரட்சிக்காரர்களுடன் சேரச்செய்யவுமான' முறை நிறுத்தப்பட வேண்டுமென்றும், தொழிலாளர் தங்கள் நியாயமான குறைகளைச் சொல்லிக்கொள்ளக் கூடியதாகத் தொழிலாளர் சங்கத்தைத் தாங்கள் பலப்படுத்தவேண்டுமென்றும் கூறியிருக்கிறாராம்.

* * *

கல்கத்தாவினின்றும் ரங்கூன் சென்று கொண்டிருந்த 'எல்லோரா' கப்பலில் ஸ்டெர்ன் என்ற ஒரு பிரஞ்சு வியாபாரி மிஸ் ஐலீன் வால்ஸ் என்ற ஓர் ஆங்கிலப் பெண்மணியைக் கொலைசெய்ய முயன்றதாகக் கைது செய்யப்பட்டு, சிங்கப்பூர் ஜில்லா மாஜிஸ்திரேட் முன் விசாரணைக்குக் கொண்டுவரப்பட்டாராம். அவரது மனோநிலைமை சரியாயில்லையென்று உகஉ வரையில் மனவியாதி ஆஸ்பத்திரியில் பார்த்து வருமாறு அவரை பந்தோபஸ்தில் வைத்திருக்க உத்திரவிடப்பெற்றதாம்.

* * *

ஜெர்மன் ராணுவத்தைக் கட்டுப்படுத்துவது பற்றி, டிசம்பர்-மீ கஉ-உ மாலை,ஜெனிவாவில், பிரிட்டன், பிரான்சு, பெல்ஜியம் இதாலி, ஜப்பான், ஜெர்மனி ஆகிய வற்றின் பிரதிநிதிகளுக்குள் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டதாம். ஜர்மன் ராணுவத்தைக் கட்டுப்படுத்தும் வல்லரசுக் கூட்டுக்கமிஷன் ஜனவரி-மீ ருகஉ எடுபட்டு விடுமாம். அவ்விஷயத்தைப் பற்றி, பிப்ரவரி-மீ முதல் தேதி துவங்கி, சர்வதேச மகாநாடே ஆராய்ச்சி செய்யத்துவங்குமாம்.

## தாய் நாடு.

டிசம்பர்-மீ கசு-ந் தேதியோடு முடிவான வாரத்தில் கவர்ன்மெண்டாரால் கஉகு,C00 பவுன்கள் விற்கப்பட்டனவாம்.

* * *

உலக முழுவதும் துவிசக்கர வண்டிகளில் சுற்றுவதற்கு, டிசம்பர்-மீ கஉ-ந் தேதி நான்கு வங்காளி வாலிபர் கல்கத்தாவைவிட்டுப் புறப்பட்டனராம்.

* * *

கௌஹாதி காங்கிரஸில் விவாத அரசியற் பிரச்னைகளின் விவாதங்களில் மகாத்மா காந்தி கலந்து கொள்ள மாட்டாரெனத் தெரிவதாக மாலைப்பத்திரிகையொன்றுகூறுவதாக, பம்பாய்ச் செய்தி ஒன்றில் காணப்படுகிறது.

* * *

சீக்கிய இலக்கியத்தின் சிறப்புப்பொருள் அகராதி (என்ஸைக்ளோபேடியா) ஒன்று கச பாகங்களில் ஒரு சீக்கியப் பண்டிதரால் இயற்றப்பெற்றனதாம். அதற்கு கச ஆண்டுகள் செலவழிந்தனவாம்.

* * *

வெப் என்ற பிரிட்டிஷ் துருப்பு ஒருவன் பெக்கட் என்ற ஒரு துருப்பைக் கொலை செய்ததாக, லாகூர் ஹைகோர்ட் நீதிஸ்தலத்தில் வந்த ஒரு வழக்கில், எதிரிக்குத் தீபாந்தர சிட்சை விதிக்கப்பெற்றது என்று தெரிகிறது.

* * *

அஹமதாபாது முனிஸிபாலிடி தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களையே கொண்டதாயிருக்க வேண்டுமென்று, அம்முனிஸிபாலிடி முந்திச்செய்த தீர்மானத்தை மறுபடி வற்புறுத்திக் கூறுவதாக ஓர் தீர்மானத்தை இப்பொழுது அது நிறைவேற்றியிருக்கிறது.

* * *

காராச்சித் துறைமுகத்தைப்பற்றி லண்டன் 'டெலிகிராப்' பத்திரிகையின் வருஷ அனுபந்தத்தில், ஒரே ஒரு விளம்பரம் போடுவதற்காக, காராச்சித் துறைமுக டிரஸ்டிகள் கு00 பவுன் அளித்தார்களாம். அதைப் பற்றி 'சிந்த் அப்ஸர்வர்' என்ற பத்திரிகை கண்டித்தெழுதியிருக்கிறது.

* * *

சென்னை இந்துமத தர்மஸ்தாபன மசோதா சம்பந்தமாக, திரு. டி. ரெங்காச்சாரியாரின் தலைமையின் கீழ்ச் சென்ற பிரதிநிதிக் கூட்டத்தை வைசிராய் டிசம்பர் மீ கூஉ வரவேற்றுப்பேசினாராம். பிரதிநிதிக்கூட்டம் பேட்டி கண்டு பேசியது முற்றும் அந்தரங்கமாய் நடந்ததாம்.

* * *

சங்கீதத்துடன் ஊர்வலம்வர உரிமை உண்டு என வற்புறுத்துவதற்கான சத்தியாக்கிரகம் படுவாகாளியில் இன்னும்நடந்து வருகிறது. பாரிசால் சிறையில் இருக்கும் கூசு சத்தியாக்கிரகிகளில் மூவர் உண்ணாவிரதம் கைக்கொண்டிருக்கின்றனர். சத்யாக்கிரகத்திற்குத் தொண்டர்கள் குவிந்து கொண்டிருக்கிறார்களாம்.

* * *

'பாப்னாவில் அராஜகம்' என்று 'பார்வர்டு' பத்திரிகையில் வெளியாயிருந்த ஒரு கட்டுரை சம்பந்தமாக நடந்து வரும் வழக்கில், 'பார்வர்டு' ஆசிரியர் தமது தரப்பு சாட்சிகள் பாப்னாவிலிருந்து வர ஆகும் செலவை சர்க்கார் பொறுத்துக் கொள்ள வேண்டுமென்று மாஜிஸ்திரேட்டிடம் ஓர் மனுச்செய்து கொள்ள, மாஜிஸ்திரேட் அதைத் தள்ளிவிட்டாராம்.

* * *

டாக்காவைச் சேர்ந்த ஜதீஷ் சந்திரராய், ஹரிபாத முகர்ஜி, நீல்மோஹன் என்ற மூவர் பொய்த் தந்தி மணியார்டர்கள் அனுப்பியதாக வழக்குத் தொடரப்பெற்றிருக்கின்றனர். அவர்கள் கஞ்சன் புரி என்னுமிடத்துக்கருகில் ஒரு கரும்புத் தோட்டத்தில், தந்திக்கம்பிகளை மறித்து, அவ்விடத்தில் தந்திக் கருவிகளை அமைத்திருக்கிறார்களாம். அதைககொண்டு அவர்கள் பல விடங்களுக்கும்பொய்த் தந்தியனுப்பிக் கொண்டிருந்தார்களாம்.

வங்காளத்தில் [illegible] பரவியிருக்கிறதாம், முதலியவற்றிலும் இன்னும் பல ஜில்லாக்களிலும் [illegible] பரவியிருக்கிறதாம்.

* * *

அகில இந்திய [illegible] இருக்கும் ஐரோப்பியர்களுக்கும் குடும்ப உபகார சம்பளத் திட்டத்தைப்பற்றி இந்திய கவர்ன்மெண்டார் யோசித்துக்கொண்டிருக்கிறார்களாம்.

* * *

பிரசாரம், சங்கங்கள் அமைத்தல் முதலிய காரியங்களுக்காக, [illegible] மாகாண [illegible] வாரத்தில், சென்னையில் ஓர் விசேஷ மகாநாடு கூடுமாம். கூட்டத்தேதி பின்னர் அறிவிக்கப்படும் என்று தெரிகிறது.

* * *

அமிருதசரஸில் உள்ள [illegible] பார்க்கைக் [illegible] செய்யப் பெற்று, கடன்களைக் கொடுத்து நீக்க [illegible] என்று தெரிகிறது.

* * *

இந்தியப் பொருளாதார மகாநாடு ஜனவரி-மீ க, உ தேதிகளில் கல்கத்தாவில் நடைபெறும். ஸர் ராஜேந்திரநாத் முகர்ஜியைத் தலைவராகவும் டாக்டர் பிரமதநாத் பானர்ஜியைக் காரியதரிசியாகவும் கொண்டதொரு வரவேற்புக் கமிட்டி அமைக்கப் பெற்றதாம்.

* * *

ஹைதராபாத் சட்டசபையின் உத்தியோகஸ்தரல்லாத அங்கத்தினர்கள் அரசியல் சீர்திருத்தங்கள் வேண்டுமென்று கேட்டுக் கொண்டதற்கு, சமஸ்தான முதல் மந்திரி, நியாயமான சகல கோரிக்கைகளும் கவனிக்கப்படும் என்று வாக்குக் கொடுத்தாராம்.

* * *

வி. ஆர். நாகின் மனைவி [illegible] தேவி அம்மாள் மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தார். தமது தேக நிலைமை தற்பொழுதிருக்கும் ஸ்திதியில், தம்மால் தலைமை வகிக்க முடியவில்லையென அவர் மறுத்துவிட்டார்.

* * *

ராவல்பிண்டியில் தபால் இலாகாவைச் சேர்ந்த கஉ குமாஸ்தாக்கள் தேர்தல் பிரசாரத்தில் சேர்ந்துகொண்டதாகவும், அதற்கு சமாதானம் சொல்லவேண்டுமெனவும் உத்திரவிடப்பெற்றனராம். அவர்கள் தங்கள் பெயர்களை அடியிற்குறித்திருக்கும் ஒருதேர்தல் அறிக்கையைப் பற்றித் தங்களுக்கு ஒன்றும் தெரியாதென மறுதலித்தனராம்.

* * *

காங்கிரஸ் வாரத்தில், அகில இந்திய சங்கீத மகாநாடு, அகில இந்திய அரசியல் [illegible] மகாநாடு, அகில இந்தியப் பசுப்பாதுகாப்பு மகாநாடு, அகில இந்திய இலக்கிய மகாநாடு, அகில இந்திய இந்து மகா சபை, அகில இந்திய [illegible] சம்மேளனம் முதலிய பல மகாநாடுகள் நடைபெறும் என்று தெரிகிறது.

* * *

கல்கத்தாவிலுள்ள '[illegible]' என்ற தேசியபாஷைப் பத்திரிகையின் காரியாலயம் டிசம்பர்-மீ கஎ-உ சோதனை போடப்பட்டதுடன், அதன் ஆசிரியரான திரு. எ. வி. செங்குப்தாவும் கைதுசெய்யப்பட்டாராம். அவர் இ. பி. கோ. கஉச-எ பிரிவின் கீழ்க்குற்றம் சாட்டப்பட்டு பிரிஸிடென்ஸி மாஜிஸ்திரேட்டால் விசாரிக்கப்படுவாராம்.

* * *

லாலா லஜபதிராய் மேலப்பஞ்சாப் முகம்மதியரல்லாதார் தொகுதிக்கும் ஜலந்தர் தொகுதிக்கும் அபேட்சகராக இந்திய சட்டசபைக்கு நின்றார்; இரண்டிலும் வெற்றி பெற்றார். ஆகவே, மேலப்பஞ்சாப் தொகுதிப் பிரதிநிதிப் பதவியை ராஜிநாமாச் செய்துவிட்டு, ஜலந்தர் தொகுதி பிரதிநிதி பதவியை மட்டும் வைத்துக்கொள்ளத் தீர்மானித்துவிட்டார்.

# தமிழ் நாடு.

சென்னைச் சர்வகலாசாலைப்பட்டமளிப்பு விழா ௧௯௨௭-ம் ஆண்டு பிப்ரவரி மீ" ௩ ௨ மாலை மணி ௪-௩0 க்கு செனேட் ஹௌஸில் நடைபெறும்.

* * *

பித்தளைப்பாத்திரம் செய்யும் தொழிலாளர் கும்பகோணத்தில் வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்களாம். காரணம் வியாபாரிகள் அவர்களுக்குத் தகுந்த கூலிகொடுக்கவில்லை யென்பதே என்று தெரிகிறது.

* * *

தென்னூரில் முனிஸிபல் ரஸ்தாவோடு சேர்ந்திருக்கிற ஆறுஅடி நிலம் முனிஸிபாலிடியார் வசத்திலிருப்பதற்கு விரோதமாக, டாக்டர் பி. எம். கிருஷ்ணசாமி நாயுடு முதலிய மூவர் ஒரு வியாஜ்யம் தொடுத்திருப்பதாய்த் தெரிகிறது.

* * *

மைசூர் அன்னசத்திரங்களை ஜனவரி முதல் அரசாங்கத்தார் எடுத்துவிடுவதற்கு விரோதமாகப் பொதுஜன உணர்ச்சி இருப்பதைநோக்கி, அதனால் மிச்சமாகும் ௬0,000 ரூபாயையும் அசக்தர்கள் பாதுகாப்புக்கு உபயோகிக்கப்படும் என திவான் உறுதி கூறியிருக்கிறாராம்.

* * *

ஒரு தனவந்தரது ஊழியரான ஒரு முகம்மதியர் தமது எஜமானர் தம்மிடம் ஒப்படைத்திருந்த சுமார் ஆயிரம் ரூபாய் திருச்சி ஜங்க்ஷனில் ரெயில்வண்டி அறையிலிருந்தும் களவாடப்பட்டதாக, போலீஸ் அதிகாரிகளிடம் புகார் செய்தாராம். களவாடப்பட்டது என்ற புகாரின் உண்மை மர்மமாயிருக்கிறதாம்.

* * *

திருச்சி மிராசுதார் மகாநாட்டின் இரண்டாவது கூட்டம் சீரங்கத்தில் அம்மா மண்டபத்தில் டிசம்பர் மீ" ௩௨௨ திரு. சி. எஸ். சுப்ரமணியன் அவர்களது தலைமையின் கீழ் நடைபெற்றது. கட்டளை அணைக்கட்டைச்சீக்கிரம் கட்டி முடிக்க வேண்டிய தென வற்புறுத்திய தீர்மானங்களும் வேறு தீர்மானங்களும் நிறைவேறின.

* * *

கும்பகோணம் "யதார்த்தவசனி" பத்திரிகையின் ஆசிரியர் மீது, கும்பகோணம் "பாரதமித்ரன்" பத்திரிகையின் ஆசிரியர் தொடர்ந்திருக்கும் அவதூறு வழக்கில், டிவிஷன் மாஜிஸ்திரேட் எதிரிமீது இ. பி. கோ. ௫00, ௫0௧ பிரிவுகளின் கீழ்க் குற்றப்பத்திரிகை படித்து, வாய்தாவை ஒத்திப்போட்டிருக்கிறார் என்று தெரிகிறது.

* * *

பதனிடாத தோல்களின் ஏற்றுமதியின் மேல் வரிவிதிப்பை உடனே எடுத்துவிடுமாறு கான்பூரில் கூடிய இந்திய சிலோன் கூட்டு வியாபாரச்சபை மகாநாடு சிபார்சு செய்ததைக்குறிப்பிட்டு, அவ்விதம் எடுத்துவிடலாகாது என்று சென்னை, தென்னிந்தியத் தோல் வியாபாரச் சங்கக் காரியதரிசி இந்தியா கவர்ன்மெண்டுக்கு எழுதியுள்ளார்.

* * *

மைசூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த ஷிமோகாவில் உள்ள ஓர் இந்து கோவிலைப் புதுப்பிக்கப் பணம் வசூலித்து, ஸ்ரீராமச்சந்திர கோவில் புதுப்பிப்புச் கமிட்டியார் வேலை துவக்கினராம். முகம்மதியர்கள் ஆட்சேபிப்பதால் அதைப் புதுப்பிக்கலாகாதென்று அமில்தார் உத்திரவிட்டாராம். மேலே வேலையை நடத்த அனுமதியளிக்கும்படி அக்கமிட்டியார் திவானைத் தந்தி மூலம் வேண்டிக்கொண்டிருக்கின்றனராம்.

* * *

மதுரை ஜில்லாவிலுள்ள ஸெகண்டரி பள்ளிக்கூடங்கள் ஆரம்பகலாசாலைகள் ஆகியவற்றின் காரியதரிசிகளும் தலைமை உபாத்தியாயர்களும் டிப்டி இன்ஸ்பெக்டர்களும் ஒரு கூட்டம் மதுரையில் கூடி ஜில்லாப் பள்ளிக்கூடங்களின் பந்தயச் சங்கம் ஒன்று அமைத்தனராம். அதன் முதல் ஆண்டுக் கூட்டம் பிப்ரவரி மீ" ௩, ௪ தேதிகளில் காரைக்குடியில் நடைபெறுமெனவும், அப்பொழுது போட்டிப் பந்தயவிளையாட்டுகள் நடந்து பரிசும் வழங்கப்பெறும் என்றும் தெரிகிறது.

தேயிலை விவசாயத்தைக் குடிசைத்தொழிலாகச் செய்து கொள்வது குன்றுகளிலுள்ள ஜாதியாருக்கு சாத்தியமாகும்படி செய்ய உதக மண்டலத்தில் ஓர் முயற்சி செய்யப்பட்டு வருகிறதாம்.

* * *

தஞ்சாவூர் போதனாமுறைப் பயிற்சிக் கலாசாலையின் மாணவர் ௩௨ பேர் பள்ளிக்கூடத்தைவிட்டு நீக்கப்பட்டதில், பலர் மன்னிப்புக் கேட்டுக்கொண்டதால் திரும்பிச் சேர்த்துக்கொள்ளப்பெற்றனராம்.

* * *

தம்பாடி திட்டத்திற்கு மைசூர் திவான் அனுமதியளித்துவிட்டாராம். ஒரு பள்ளத்தாக்குக்குக் கரைபோட்டு, ஒரு ஏரிஜலத்தையும் குன்றுகள் சிலவற்றின் ஜலத்தையும் தேக்குவது அந்தத் திட்டம். அதற்கு ௩ லட்சம் ரூபாய் செலவாகுமாம்.

* * *

கோயம்புத்தூர் விவசாயக் கல்லூரியில் போதனாமுறை இலாக்காவையும் சாஸ்திர ஆராய்ச்சிஇலாக்காவையும் தனித்தனிபிரித்துவிட, சர்க்கார் தீர்மானித்துள்ளார்களாம். இதனால், செலவு ஒன்றும் அதிகமாகாதாம். தலைவர் மட்டில் இரண்டிற்கும் ஒருவரே இருப்பார் என்று தெரிகிறது.

* * *

கும்பகோணம் தாலுக்கா போர்டு தேர்தலில் தோற்றுப்போன திரு. எம். வி. ஸாமிநாத செட்டியார் என்பவரையும், திரு. எ. எஸ். இஸ்மாயில்ஸா ராவுத்தர் என்பவரையும் தஞ்சை ஜில்லா போர்டு தலைவர் திரு. பன்னீர்செல்வம் அத்தாலுக்கா போர்டுக்கு அங்கத்தினர்களாக நியமனம் செய்துவிட்டார் எனப்படுகிறது.

* * *

விழுப்புரத்தைச் சேர்ந்த சக்ரபாணி செட்டி என்பவர் தமது மனைவியைத் திண்டிவனம் ஸ்டேஷன் கிணற்றில் தள்ளிக் கொன்றதாக வந்த வழக்கில், தென்னாற்காடு ஸெஷன்ஸ் ஜட்ஜி, ஜூரிகள் 'எதிரி குற்றவாளியல்ல' என்றதை ஒப்புக்கொள்ளாமல், எதிரிக்கு நான்கு வருஷம் கடின காவல் விதித்தார் என்று தெரிகிறது.

* * *

கபிஸ்தலத் தகராறு சம்பந்தமான நிலத்தில் குடியானவர்கள் குத்தகை பாத்தியம் கொண்டாடி, உழுது கொண்டிருக்கையில் வேறு சிலர் தடுத்தனராம். மாஜிஸ்திரேட் அதற்குப் போலீஸ் பந்தோபஸ்து அளித்ததுடன், வடிவேலு முதலிய மனுதாரர்களுக்கும் ரத்ன மூப்பனார் முதலியவர்களுக்கும், கலகம் நடக்காமலிருக்க அவர்களிடம் ஏன் ௧௪௫ பிரிவின் கீழ் ஜாமீன் வாங்கக்கூடாதென்பதற்கு முகாந்தரம் தெரிவிக்கும்படி சேட்டு கோட்டீஸ் விடுத்திருக்கிறாராம்.

* * *

சென்னையின் புதிய சட்டசபை டிசம்பர்மீ" ௧௪௨ முதன்முதலாகக் கூடியது. புது அங்கத்தினர்கள் கிரமப்படி ராஜவிசுவாசப் பிரமாணம் செய்தார்கள். சுயராஜ்யக்கட்சியினரான திரு. வி. வி. எஸ். நரஸிம்மராஜு போட்டியின்றி சட்டசபைக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அடுத்த கூட்டத்தில் உப தலைவர் தேர்தல் செய்வதாக, ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. பொருளாதாரக் கமிட்டி பொதுக்கணக்குக் கமிட்டி ஆகிய இரண்டுக்கும் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

* * *

௧௯௨௬-ம் ஆண்டு ஆகஸ்டுமீ" ௧௩௨ ராயபுரத்தில் ஒரு ஊர்வலத்திற் கலவரம் செய்ய என். ராமசாமி நாடான் முதலிய எழுவர் சட்டவிரோதமான கூட்டம் போட்டதாக வந்த வழக்கில், மாஜிஸ்திரேட் எதிரிகளுக்குப் பலதா தண்டனைகள் விதித்தார். எதிரிகள் ஹைகோர்ட்டில் மறு விசாரணை மனுச்செய்து கொண்டதில், ஹைகோர்ட்டார் மாஜிஸ்திரேட் தீர்ப்பைத் தள்ளிவிட்டு, பிரஸிடென்ஸி மாஜிஸ்திரேட் வழக்கை மறுபடி விசாரிக்கும்படி உத்திரவு செய்திருக்கிறார்கள் எனத் தெரிகிறது.

---

# விநோதக்கொத்து.

போலீஸ்காரன்:—ஐயா! இது தங்கள் வண்டியா?

கனவான்:—என் வண்டிதான்; ஆனால், உங்களிடம் உண்மையைச் சொல்ல வேண்டாமா? விலையில் இன்னும் ஒரு பகுதி கொடுத்தபாடில்லை.

ஃ ஃ ஃ

செல்லத்தின் பெண் குழந்தை உள்ளே ஓடிவந்து, "அம்மா! நான் செல்லப்பாவைக் கலியாணம்செய்து கொள்ளப்போகிறேன்" என்றது.

செல்லம்:—"ஏன்?"

குழந்தை:—செல்லப்பாவின்மாமா அவனுக்கு ஒரு ரூபாய் பணம் கொடுத்திருக்கிறார்.

ஃ ஃ ஃ

வைத்தியர்:—உங்களுக்கு விஸ்கி சாராயம் தேவை என்பதற்குரிய சின்னங்கள் இருந்தாலொழிய, நான் விஸ்கி கொடுக்க உங்களுக்கு அனுமதி தர முடியாது.

நோயாளி:—அதற்கு என்ன சின்னங்கள் வேண்டுமென்ற யோசனையாவது சொல்ல முடியுமா?

ஃ ஃ ஃ

ஒரு ஸ்திரீ மாஜிஸ்திரேட்டை நோக்கி, "என் கணவன் தன் தாயார் வீட்டில் வசிக்கிறார். சொந்தக்காரர்களுடன் வசிப்பது எனக்குப் பிடிக்கவில்லை. அதை நான் ஆட்சேபிக்கிறேன். ஆகவே, அவர் என்னுடன் கூட வசிக்கும்படி நீங்கள் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்" என்று சொன்னாள்.

மாஜிஸ்திரேட்:—நீங்கள் எங்கே வசிக்கிறீர்கள்?

அந்த ஸ்திரீ:—நான் என் அம்மாளுடன் வசிக்கிறேன்.

ஃ ஃ ஃ

வைத்தியர்:—குடிப்பது விஷயத்தில் நான் சொன்னதைக் கவனித்து நடந்து வருகின்றீர்களா? அளவை மிதப்படுத்திக் கொண்டீர்களா?

நோயாளி:—ஆகா! தினம் ஒன்றுக்கு இப்பொழுது ஆறு சீசாத்தான் குடிக்கிறேன்.

வைத்தியர்:- இதென்ன இது! நான் மூன்று சீசாத்தானே குடிக்கலாமென்று சொன்னேன்?

நோயாளி:—நீங்கள் மூன்று சீசாத் தான் அனுமதித்தீர்கள். இன்னொரு வைத்தியர் ஒரு மூன்று சீசா அனுமதித்திருக்கிறார். ஆக மொத்தம் ஆறு சீசா அல்லவா?

ஃ ஃ ஃ

புதிய ஸார்ஜன்ட் மிகவும் கடுமையான பெயர் வழி மழை வேறு பெய்திருந்தது. சிப்பாய்கள் தேகப் பயிற்சிக்காக, வரிசையாய் நின்று கொண்டார்கள். ஸார்ஜன்ட் புதிய அப்பியாசம் ஒன்றை எப்படிச் செய்வது என்று காட்டுவதற்காகத் திரும்பிய பொழுது, வழுக்கி விழுந்து விட்டார். ஒரு சிப்பாய்க்கு மட்டில் சிரிப்பு அடக்க முடியவில்லை. 'கல்' என்று நகைத்து விட்டான், ஸார்ஜன்ட் எழுந்திருந்தார். அவனை உறுத்துப்பார்த்தார்.

ஸார்ஜன்ட்:—கழுதை! எதற்காகச் சிரிக்கிறாய்? என்ன ஆனந்தம்? என்ன விநோதத்தைக் கண்டு விட்டாய்?

சிரித்த சிப்பாய் (பயத்துடன்):—இல்லை, ஸார்! நான். இது—நீங்களல்லாமல் வேறு யாராவது இப்படி விழுந்திருந்தால், எவ்வளவு வேடிக்கையாயிருந்திருக்கும் என்பதையே யோசித்துக் கொண்டிருந்தேன்.

பண்டிதர்:—என்னைப் பார்த்தா நகைத்துக் கொண்டிருந்தாய்?

மாணவன்:—இல்லை, ஸார்!

பண்டிதர் "பின், நகைக்கத் தக்க பொருள் இந்த அறையில் என்ன இருக்கிறது" என்று மாணவனைக் கடிந்து கொண்டார்.

ஃ ஃ ஃ

சிறைஅதிகாரி(கைதியை நோக்கி):—உன்னை ஒரு வாரத்திற்கு முந்தியே விடுதலை செய்திருக்கவேண்டும். தவறுதலாக இதுவரை வைத்திருந்துவிட்டோம். அதற்கு வருந்துகிறேன்.

கைதி:—இப்பொழுது என்ன மோசம்? அடுத்த தடவை இதைக் கழித்துவிட்டீர்களானால் போகிறது.

ஃ ஃ ஃ

காரியாலய அதிகாரி:—உன்னை வேலையில் அமர்த்திக்கொள்ளுவதற்கு முன், உன்னுடைய புத்திசாலித்தனத்தைப் பரீட்சிக்கவேண்டும்.

வேலைக்கு வந்திருக்கும் விண்ணப்பதார்:—புத்திசாலித்தனத்தைப் பரீட்சிக்கப்போகிறீர்களா? 'டைப்' அடிப்பவன் வேண்டுமென்று அல்லவா விளம்பரம் செய்திருந்தீர்கள்?

ஃ ஃ ஃ

"என் பவுன் மோதிரத்தைப் பார்த்தாயா? அது எவ்வளவு அழகாயிருக்கிறது!"

"அது பவுன் மோதிரமல்ல; வெறும் முலாம் பூசப்பட்ட பித்தளை மோதிரம்."

"அப்படியா? என்னை ஏமாற்றிவிட்டானே! முக்காலேவீச ரூபாயை அடித்துக்கொண்டு போய்விட்டானே!"

ஃ ஃ ஃ

ஒரு வியாபாரி சாப்பிட உட்காரும் பொழுது, தமது மனைவியைக் நோக்கி, "இன்று நான் ஒரு நல்ல காரியம் செய்தேன்" என்றார்.

மனைவி "அது என்ன காரியம்" என்று கேட்டாள்.

கணவன் "நமது கடைக் குமாஸ்தாக்களில் ஒருவன், தான் கலியாணம் செய்து கொள்ள வேண்டுமென்றும், அதற்குச் சம்பளம் உயர்த்தித் தந்தால் தான் முடியுமென்றும் சொல்லி, சம்பளம் உயர்த்தித் தரும்படி கேட்டான். நான் மறுத்து விட்டேன்" என்றார்.

ஃ ஃ ஃ

ஒரு நகரத்தான் நாட்டுப்புறத்துக்கு வேலைக்குப் போனான். ஒரு குடித்தனக்காரரிடம் அமர்ந்தான். ஒரு நாள் உழவுக்கு அனுப்பப்பட்டான். படைச்சால்கள் ஒழுங்காக இல்லாமல், கோணலாக அவன் உழுது கொண்டிருந்ததைக் கண்ட குடித்தனக்காரர் அவனை நெருங்கி, "அதோ பார். நமக்கு நேரே எதிரில் இருக்கிற அந்தப் பசுமாட்டைப் பார்த்துக்கொண்டு, அப்படி இப்படித் திரும்பாமல், நேரே போ. அந்த மாதிரி தான் உழ வேண்டும்" என்று சொல்லிவிட்டு, வீட்டுக்குப் போனார். கொஞ்ச நேரம் கழித்து அவர் மறுபடி வந்து பார்க்கும் பொழுது, அவன் முன்னைவிடத்தாறுமாறாக உழுது கொண்டிருந்தான். அவர் கோபித்துக் கொள்ளவே, அவன் "நான் என்ன செய்வது? அந்தப் பசுமாட்டைப்பாருங்கள்" என்றான்.

---



## பகிரங்கக் கடிதம்.

அன்புள்ள ஊழியன் ஆசிரியர்க்கு, தங்கள் நாளது கார்த்திகை மாதம் எட்டாந்தேதி ஊழியன் பத்திரிகையில் முதற் பக்கத்திற் பொய்ப்பிரசார மென்ற மகுடமிட்டு எழுதியிருக்குஞ் சட்டுரையில், நாலும் புராணம் விபூதியென்ற சில பாகங்களில் சம்பந்தப்பட்டிருக்கும் முறையில், தங்களுக்குப் பதிலெழுதக் கடமைப்பட்டிருக்கிறேன். இதைத் தங்கள் பத்திரிகையில் வெளியிடுவீர்களாக.

தாங்கள் எழுதியிருப்பதில் ஏதோ புராணங்கள் முழுமையும் நடந்தனவல்லவென்று கூறுங் கூற்றைத் தக்கமுறையில் மறுக்கவல்லாரைக் காண்கின்றோமில்லை. ஆனால் "புராணங்களில்லையாம், என்ன கொடுமை இதுவென்று சாற்றுகின்றார். புராணங்கள் நடந்தனவே யென்பதுண்மையாயின், அதற்குறிய காரணங் கூறுதலன்றோ அறிஞர்கடன்? விபூதியேன் பூசுதல் வேண்டுமென்று ஒருவன் கேட்பானானால், அடபாபி! இப்படிக் கேட்கலாமா, இதற்கு எப்படிக் காரணங்கள் கூற முடியும் என்று இயம்புபவன் மடையனா அறிஞனா? அறிவுலகம் தீர்மானித்துக்கொள்க" என்றும் இன்னும் அநேக விஷயங்களும் எழுதியும் எங்கும் மூலைமுடுக்குகளில் காணுமிடங்களில் சில அறிவற்ற பெருமூடர்கள் இன்னது சொல்லுகின்றோமென்பதைக் கூட வுணராமல் விவாத முறையைச் சிறிதுமறியாமல் எல்லாவற்றையும் மறுக்க ஆரம்பித்துவிடுகிறாரென்றும் இழிஞர்களென்றும் மூடர்களென்றும் பொறியிலிகள் என்றும் சகலவாராய்ச்சிகளிலும் தங்களுக்குச் சமமாக இவ்வுலகிலேயே ஒருவருமில்லையென்று கருதிவருகிற அத்தகைய பெரியோர்களான தாங்கள் வசை பாடியிருக்கின்றீர்கள்.

ஒருவிதமான கைம்மாறுங் கருதாது உலகமானது நல்ல நிலையில் நடைபெற்று, மக்கள் தக்க வழியில் நடந்து ஈடேறவேண்டுமென்று பெருநோக்கங் கொண்டு, நமது ஆசார்யர்களான பெரியோர்கள் செய்திருக்கிற பதினெண் புராணங்களில் குற்றங்கள் கூர்ந்த மதியின் ஆராய்ச்சித் திறனால் எத்தப் பொய்யை உலகத்தார் நம்பும்படி கண்டுபிடித்திருக்கிறீர்கள்?

இனி, புராணங்கள் உண்மையென்பதைத் தக்க முறையிலெடுத்துக்காட்டும்படி சொல்லியிருக்கிறீர்கள். தாங்கள் குறிப்பிடுவதும் எங்களுக்கும் சௌகரியமானதுமான ஒரு குறிப்பிட்ட நாளில் புராணங்களுண்மையென்பதை உறுதிப்படுத்த, தயாராக விருக்கிறோம். தாங்களெந்த அம்பலத்தில் புராணங்களின் பொய்யை உறுதிப்படுத்தியிருக்கிறீர்கள்? நீங்களெந்த ஊரிலும் பேசியிருப்பீர்கள். மற்றவர்களும் ஒரு ஊரில் பேசியிருப்பார்கள். நீங்கள் பேசியது பெரிய அம்பலம் போலவும், மற்றவர்கள் பேசியது மூலைமுடுக்குகளென்றும் கைகூசாது எழுதியிருக்குங்காரணமென்ன? தாங்கள் புராணங்களிலுள்ள பொய்யைப் பற்றி இன்னவிடத்திற் பேசப்போகிறோம், தர்க்கம் பண்ணுகிறவர்கள் வரலாமென்று எக்காலத்திலேனு மறிவித்திருப்பதுண்டா?

அவ்விதமில்லாத நிலையில் மற்றவர்களை மூலைமுடுக்குகளில் பிரசாரஞ்செய்பவர்களென்றுஎழுதும் வீரமென்னே! தாங்களும் தங்களைப்போன்ற அநேகஅறிஞர்களும் ஒருங்கு சேர்ந்து பதினென் புராணங்களிற் பொய்க் கூறியிருக்கிறதென்று எவ்வளவு ஆராய்ச்சி செய்து சொன்னபோதிலும், அதை ஒரு சிறிதும் அங்கீகரியாதவர்களாயும் தக்க சான்றுடன் உண்மையை நிலைநாட்டக் கூடியவர்களாயும், பொய்மையேயில்லை உண்மைப் புராணங்களே யென்று தக்கமுறையில் வாதிக்கக்கூடியவர்களாயும் ஒருகோடி மக்களிருக்கிறார்களென்பதை தங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். விபூதியைப்பற்றித் தமிழ்வேதமாகிய தேவாரத்தில் ஸ்ரீஞானசம்பந்தப் பெருமான் திருநீற்றுப் பதிகம் பதினொரு பதிகங்களினாலும், இன்னுமநேகவிடங்களிலும் மிக விளக்கமாக அறிவித்திருக்கிற நிலையில், அதையறியாத மக்களுக்கு நேரே யெத்தனையோதரம் விளக்கிக்காட்டியும் தெரியாதவர்கள் மூடர்களே யொழிய, அவ்வுண்மையை யறியாது பிதற்றுபவர்களை அடே பாபியென்று கண்டிப்பவர்கள் மூடர்களல்ல.

நம்முடைய சாதியில் தற்கால மேற்பட்டிருக்கிற அளவு கடந்த செலவுகளையும் சில அனுசிதங்களையுந் திருத்துவதற்கும் உலக நடையையும் அன்பான முறையில் தாங்கள் ஆராய்ச்சியுடன் எழுதிவருவது ஒழுங்கே யொழிய, மகாப் பெரியோர்களான பரமாச்சாரியர்கள் செய்த புராணங்களைத் தாங்கள் ஆராய்ச்சி செய்வதென்பது மண்குதிரையை நம்பி ஆற்றிலிறங்குவதையே ஒக்கும். தங்கள் கூற்றைப் பேரறிஞர்கள் எவரேனும்மறுத்தால், தங்கள் வாழ்க்கைத் தீனியாக அமைந்திருக்கும் ஊழியனில் வசைபாடுவதையே தொழிலாகக்கொண்டுவிட்டீர்கள். அறிவுலகமென்று தாங்கள் கூறும் உலகமானது வசை மொழிகளை யேற்குமா? இனி முறைமுகமாக எவரையும் வசைமொழிகளால் தாக்காது, ஆராய்ச்சிக்காரர்களான தங்கள் கூட்டத்தார் குறிப்பிடுவதும் எங்களுக்கும்சௌகர்யமானதுமான ஒரு நாளைக் குறிப்பிட்டால், புராணங்கள் முழுவதும் உண்மையென்று கூறுங் கூட்டத்தாரான நாங்கள் தக்க ஆதாரங்களுடன் அறிஞர்கள் முன்னிலையில் வாதிக்கத் தயாராக விருக்கிறோம்.

அமராவதிபுதூர் காந்திதிருநாளில் தங்கள் பிரசங்கத்தில் மகாத்மா காந்தி தன் சரித்திரத்தைத் தாமே யெழுதிவருவதானது, பின்னுள்ளவர்கள் முதலைவாய்ப்பிள்ளை எலும்பைப் பெண்ணாக்கிய கதைகள்போல், எழுதிவிடுவார்களென்று தாமே எழுதிவருவதாகப் பேசியிருக்கிறீர்கள். தங்களபிப்பிராயத்தில் மேற்கண்ட விரண்டு விஷயங்களும் பொய்யென்று கண்ட தாங்கள் தங்கள் காந்திபிள்ளைத் தமிழில் பதினேழாம் பக்கம் தாலப்பருவத்தில், மூன்றுவது பாட்டில் சைவ சமயாசார்யர்கள் நால்வர்களிலொருவரான திருநாவுக்கரசு சுவாமிகள் செய்த அற்புதச் செயல்களை அப்படியே யொப்புக்கொண்டு, அந்த சத்தியாக்கிரக நாவுக்கரையன் வரவேயென்றுமகாத்மாவைத்துதித்திருக்குங்காரணமென்ன?

அப்படியொப்புக்கொண்ட தாங்கள் முதலைவாய்ப்பிள்ளையையும் எலும்பைப் பெண்ணாக்கியதும் பொய்யென்று கருதுங்கூற்று அறிஞர்களேற்கத்தகுந்ததா? மேலும் புராணங்கள் செய்யவேண்டிய இலக்கணவிதிப்படி சேர்த்திருக்கும் அழகான வர்ணனைகளையும் அற்புதச்செயல்களையும் பொய்யாக சேர்த்திருப்பதாக கருதும் தாங்கள் மேற்படி பிள்ளைத் தமிழில் அம்புலிப்பருவத்தில் சந்திரனுக்கும் மகாத்மாவுக்கும் ஒப்பிட்டுக் கூறியிருக்கும் ஒவ்வொரு பாட்டின் கருத்தும் முழுப் பொய்யல்லவா? அதை உபமானவுபமேயமாகச் சேர்த்திருக்கிறதென்றால், புராண வர்ணனைகள் மாத்திரம் எங்ஙனம் பொய்யாகும்? தாங்கள் தங்களுக்கு ஊழியன் பத்திரிகை ஒன்று இருப்பதைக்கொண்டு உண்மையன்பர்களைத் தாக்குவதற்கும் அல்லது நாங்கள் தாங்கள் கூறும் ஆராய்ச்சி விஷயங்களுக்கு உண்மை மறுப்புக்கூறுவதன்றி வசைமொழி புகன்றிருந்தால் அதற்கும், புராணங்கள் முற்றிலும் உண்மையே என்று வாதிக்கும் எங்கள் கூட்டத்தார் செய்வது நியாயவிரோதமாகவிருந்தால் அதற்கும், அல்லது பொய்யுகலந்திருக்கிறதென்று கூறும் தங்கள் கூட்டத்தாரின் நிலைநியாயவிரோதமாகவிருந்தால் அதற்கும், எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளை தக்க தண்டனை விதிக்கவேண்டுமென்றும்பிரார்த்தித்துக் கேட்டுக் கொள்வதுடன் அமைவோமாக என்று ஆத்தங்குடி திரு. சு. வீ. ர. கதிரேசன் செட்டியார் எழுதுகிறார்.

---



## அவதூறு வழக்கு.

"ஊழியன்" அவதூறு வழக்கைப்பற்றி ரங்கூனில் பிரசுரமாகும் 'தேசோபகாரி' எழுதுவது வருமாறு:—

ஊழியன் ஆசிரியர் ராய. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் பிரசுரகர்த்தா என்ற முறையில் ஒரு ரூபா அபராதம் விதித்ததாக ஏற்கனவே கூறியிருந்தோம். அவ்வழக்கை கோட்டமிட்ட அன்பர்கள் இத்தீர்ப்பும் அநியாயத் தீர்ப்பென்றுதான் சொல்வார்கள். அப்படியே பலரும் ஒப்புக்கொள்ளுகிறார்களென்பது நிச்சயம். நாம் அபிப்பிராயப்படுகிறதாவது, கேஸை தள்ளிவிடாமல் ஒரே ரூபாய் அபராதத்தை விதித்து விட்டார். ராய. சொக்கலிங்கமவர்களும் இதை எதிர்பார்த்திருப்பாரென்று நாம் எண்ணவில்லை. நியாயாதிபதி தங்குழுவினராகிய ராவ்பகதூர் சிதம்பரம் செட்டியாரவர்கள் மனமகிழ்ச்சியடையச் செய்திருப்பார். என்றாலும், ஒருவிதத்தில் நம் எதிரிக்கு ஒரு ரூபாதானா அபராதம் விதிப்பதென மனப்புழுக்கம் கொண்டிராமலிரார். இனியாகிலும் பட்டம்பெற்றவர்கள் வீணே கோர்ட்டில்செலவழித்து அவமானமடையாமலிருப்பார்களா? அந் நியாயாதிபதி தங்களுக்கு சம்பளம் பகிர்ந்து கொடுத்தும் அரசாங்கத்தார் ராவ்பகதூர் பட்டம் கொடுத்து தங்களுக்கு தக்க பலமாக வைத்திருப்பதை அறியாமலிரார். ஆனதுபற்றி, தங்களுக்கு பக்கபலமான ராவ்பகதூர் செட்டியார் தெரியாத்தனமாய் இக் கேஸைக் கொண்டு வந்துவிட்டார். இதிலொபிரயோஜனமில்லை. தள்ளிவிட்டாலோ நமது ராவ்பகதூர் செட்டியார் அவமானமடைவார் என்ற கருத்துக் கொண்டே, 'ஊழியன்' ஆசிரியருக்கு ஒரு ரூபாய் அபராதம் விதித்தனர் போலும்! இதில் ராவ்பகதூர் செட்டியாருக்கு அவமானமா, அன்றி ஆசிரியர் செட்டியாருக்கு அவமானமா என்பதை நேயர்களே யூகித்துக்கொள்ளலாம்.

---

மனித அங்க அமைப்பையே மாற்றி அமைக்கும், இரண சிகிச்சை முறை அமெரிக்காவில், மிக முன்னேறி வந்திருக்கிறதாம். ஒரு நாடகமாதின் மார்பின் சுற்றளவு ௩௪ அங்குலமாயிருந்ததாம். இவ் இரண சிகிச்சை மூலம், சத்திரம்வைத்துச்சிகிச்சை செய்து, அவளது மார்பின் சுற்றளவை ௩௨-அங்குலமாகக்குறைக்கப் பெற்றனளாம். இப்பொழுது அவளது உடல் நிறையில் ௩௪ இராத்தல் குறைந்திருக்கிறதாம்.

* * *

சென்னையில் வேலையில்லாப் பிரச்னையைப்பற்றி, விசாரிக்கத் தோன்றியிருக்கும் கமிட்டி முன் சாட்சியம் கொடுத்த திரு. டி. எஸ். ரெட்டி என்பவர் இதைத்தீர்க்க ஒரு யுக்தி கூறினாராம். படிப்பு மலிவாய் விட்டதால், வேலைகிடைக்கவில்லை. எனவே, படிப்பை அதிகச் செலவுடையதாய்ச் செய்துவிடுவதால், இது தீர்ந்துவிடும். படிப்பைக் கிராக்கிசெய்வதால் வேலை யில்லாத் திண்டாட்டத்தைத் தீர்த்துவிட முடியுமானால், வேலையில்லாது செய்துவிடுவதால் படிப்பை மலிவு செய்துவிடலாமல்லவா? நாட்டின் படிப்புக் குறைவைப்பற்றி வருந்தும் அரசியல் வாதிகள் இதைக்குறித்துக் கொள்வது நலம்.

* * *

கலிபோர்னியாவில் டாக்டர் வி. ஜி. அப்பாட் என்பவர் ஓர் நூதன இயந்திரம் செய்திருக்கிறாராம். அதில் ஒரு பெரிய அலுமினியத் தகட்டுக்கண்ணாடி அமைக்கப்பட்டிருக்கிறதாம். சூரிய கிரணங்கள் அதில் விழுந்தால், அக்கிரணங்கள் குறுகி அதிக சக்தியுடன் ஒரு குழாய் மீது பிரதிபலிக்கிறது. அக்குழாய்க்குள் ஊற்றி வைக்கப்படும் எண்ணை சூடாய், ஒரு சமையல் அடுப்பில் தாக்குகிறது. அதனால், சமையல் செய்யப்படுகிறது. அதாவது சூரியனது உஷ்ணத்தைக்கொண்டே சமையல் செய்யக்கூடிய ஒரு இயந்திரத்தை அவர் செய்து முடித்திருக்கிறார்.

திரு. ஷண்முகம் செட்டியார்.

கொழும்பில் ஓர் உபசாரம்.

( ஓர் நிருபரிடமிருந்து. )

ஆஸ்திரேலியாவில் நடைபெற்ற வகாநிபத்தியப் பார்லிமெண்டு மஹா நாட்டிற்கு அகில இந்திய மஹாஜனங்களின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்தனுப்பப்பட்டவரும், இந்திய சட்ட சபை அக்கிரசரும் அகில இந்திய சுயராஜ்யக் கட்சியின் காரியதரிசியும் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் காரியதரிசியுமாகிய கோயம்புத்தூர் திருவாளர் ஆர். கே. சண்முகம்செட்டியார் பி. ஏ., பி. எல்., எம். எல். ஏ.அவர்களுக்கு திருவாளர் பெ. பெரி. சுப்பிரமணியசெட்டியாரவர்கள் உ-கஉ-உகூ, வியாழக்கிழமை மாலை ௫-மணிக்கு தமதில்லத்தில் ஓர் சிற்றுண்டி விருந்து நடத்தினவர்கள். விருந்து மிகச் சிறப்பாகவும் கௌரவமாகவும் நடைபெற்றது. அதுகாலை சுமார் ௨௦௦ பேர்கள் வரை விருந்தினராக விஜயம் செய்திருந்தார்கள். எல்லோரும் சிற்றுண்டி அருந்திய பின்னர், திரு. சுப்பிரமணிய செட்டியாரவர்கள் திரு. சண்முகம் செட்டியாரவர்களின் ஊழியத்தையும் பெருந்தன்மையையும் மிகச் சுருக்கமாகக் கூறி, திரு. செட்டியாரவர்கள் சிறிது நேரம் தமிழிற் பேசும் படி வேண்டிக்கொண்டார்கள். திரு. செட்டியாரவர்கள் நீண்ட கரகோஷங்களுக்கிடையே எழுந்து, தமது ஆஸ்திரேலியாப் பிரயாணத்தைப்பற்றியும் பிறவற்றைப் பற்றியும் மிகத் தெளிவாகவும் சுருக்கமாகவும் கேட்போர் மகிழுமாறு, மிக்க அழகாக தமிழில் சுமார் ௨௦ நிமிடம் பேசினார்கள். திரு. செட்டியாரவர்களின் பேச்சு முடிந்ததும் திரு. ஏ. எஸ். ஜான் அவர்கள் வேண்டுகோளும் வந்தனமுங்கூற, சரியாக கூ-௩௦ மணிக்குக் கூட்டம் முற்றுப்பெற்றது.





நோட்டீஸ்.

ருமாநாதபுரம் ஜில்லா திருப்பத்தூர் தாலூக்காவைச் சேர்ந்த பட்டமங்கலத்திலிருக்கும் வீர. பெரி. பெரியகருப்பஞ் செட்டியார் தெரிவிப்பதாவது என்னவென்றால், என்மகன் மூத்தவனுகிய சொக்கலிங்கம், புத்தி சுவாதீனமில்லாமல் கெட்ட சாவகாசமும் போக்கிரிகளுடன் கூடிக்கொண்டு நடத்தைகள் சரியில்லாமல் திரிவதால் மேற்படியானுக்கு யாருவது கடன் கொடுத்தாலும், கொடுத்திருந்தாலும் நான் டி கடன்களுக்கு ஜவாப்தாரி ஆகமாட்டேன். இவ்விடத்திலுள்ள வீடு நிலங்கள் மற்றயிடம் சொத்துக்களும், பர்மாவில் இன்சின் ஜில்லாவைச் சேர்ந்த லேகைக்கலைவியிலுள்ள சொத்துக்களும் நிலபலன்களும் டி யானுக்கு பாத்தியமில்லை. எல்லாவித மான சொத்துக்களும் என் சுய ஆர்ஜித சொத்துக்கள் ஆகையினுலே டிையான் வாங்கல் கொடுக்கலுக்கு நானும் யென் குடும்பத்திலுள்ள மற்றவர்களும் பாத்தியப்படமாட்டோம் என்பதை சகல மானவர்களுக்கும் இதன் மூலம் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

வீர. பெரி. பெரியகருப்பன்
செட்டியார்.



விளம்பரம்.

அரு. அரு. சோம, இன்சால் வெண்டில் டி யாருக்கு சொந்தமான இதனடியில் விவரிக்கப்பட்ட சொத்துக்களையும் இன்னும் மற்ற இதர அசேக சொத்துக்களையும் தேவையானவர்கள் அடியில் கையொப்பம் வைத்திருக்கிறவர்களிடமிருந்து கிரயத்துக்கு வாங்கிக்கொள்ளலாமென்று இதன் மூலமாய் தெரிவித்திருக்கிறோம்.

1. திருநெல்வேலி ஜில்லா தச்ச நல்லூர் AR. AR. SM. ஷுகர்மில், டிஸ்டிலரி.

2. தஞ்சாவூர் ஜில்லா குத்தாலம் AR. AR. SM. ரைஸ்மில் வகையரு,

3. ருமாநதபுரம் ஜில்லா கோவிந்தமங்கலம் ஜமீன் வகையரு கிருமங்கள் -17.

4. தஞ்சாவூர் ஜில்லா காரகோட்டை கம்பர் கோவில் ஓமக்குவயல் கிருமங்கள்.

5. தேவகோட்டைக்கி 10 மைல் சமீபத்திலுள்ள வெத்தியாலங்குளம் கிருமங்கள்.

6. சென்னப்பட்டணம் பவளக்கார தெருவு 134. 135 கெம்பர் வீடு.

டி சொத்துக்கள் விலை விஷயமாகவும் மற்ற தேவையான விபரங்களையும் அடியில் கையொப்பமிட்டவர்களிடமிருந்து தேவையானவர்கள் தெரிந்து கொள்ளலாம்.

ஹைகோர்ட்டு அபிஷியல் அசைனி
11-26.



கலியின் கோலாகலம்.

இதில் அலங்கார சுந்திரம் என்பவன் செய்யும் சாஹஸங்களும் தப்பறியும் சாமர்த்தியமும் செஷன் தீர்ப்பும் படிப்பவர் மனதை கவர்ந்து ஓயாமல் சிரிப்பையுண்டாக்கும் ஓர் பெண் மணியால் எழுதப்பட்டது. விலை ரூ. 0—12—0

| | |
|---|---|
| ராஜ ராஜேஸ்வரி | 1—8—0 |
| மாயசுந்தரி | 0—12—0 |
| அமிர்தகுமாரி | 1—4—0 |
| ஜீஜாபாய் | 1—4—0 |
| ஜலாயணக்கன்வன் | 0—12—0 |
| சம்பீக்கை துரோகம் | 1—8—0 |
| மாணிக்கவல்லி | 1—0—0 |
| தயாபரி சுந்தரி | 0—12—0 |
| வசந்த சமுத்திரம் | 0—12—0 |
| லக்ஷமி காந்தன் | 2—0—0 |
| இருகொலை ரகசியம் | 1—0—0 |
| காசி பூஷணம் | 0—12—0 |
| சர்வமங்க காசன்திரம் | 1—0—0 |
| சதிபதிகளின் மர்மம் | 1—0—0 |
| ஸ்திரிபுருஷ ரகசியம் | 1—0—0 |
| ஜீரமிஞ்கன சிருங்காரம் | 0—12—0 |
| கொக்கோகம் | 1—0—0 |
| கைத்தொழில் வணிக ரகசியம் | 1—8—0 |

ஜானகிராம் அண்டு கம்பெனி
வெங்கட்டராமய்யர் வீதி
(மதராஸ்.

வியாபாரத்திற்கழகு விளம்பரமே.

நண்பர்களே!

பலதிறப்பட்ட அச்சுவேலைகள் வெகு அழகாகப் பல வர்ணங்களுடன் குறைந்த விகிதத்தில் அச்சிட்டுக் குறித்த காலத்தில் பெற விரும்பினுல் எங்களிடம் வாருங்கள்.

வெளி யூரிலுள்ளவர்கள் தபால் மூலமாயும் அனுப்பலாம்.

காரியஸ்தர்,
ஊழியன், காரைக்குடி.

# சிதம்பரம் செட்டியார் அவதூறு வழக்கு.

இப்பெயரோடு, ஊழியன் ஆசிரியர் ராய. சொக்கலிங்கன் மீது இவ்வூர் ராவ் பகதூர் ஆவி. பழ. சிதம்பரஞ் செட்டியாரால் தொடரப்பட்டு, இராமனுதபுரம் சப் டிவிஷனல் மாஜிஸ்டிரேட் கோவிந்த நாயர் முன்னிலையில் நடந்த அவதூறு வழக்கின் முழு விபரங்களும் அடங்கிய புத்தகமொன்று தயாரிக்கப்பெறுகிறது. விரைவில் வெளிவருதல் கூடும்.

விலை பின்னர் நிர்ணயிக்கப்படும். இப்பொழுதே தங்கள் பெயர்களைப் பதிவு செய்துகொள்வோர்க்குத் தபால் கூலி இனம்.

காரியஸ்தர்,
ஊழியன் கம்பெனி (லிமிடெட்), காரைக்குடி.

---

தமிழ்நாடெங்கும் 80 வருடங்களாய் கீர்த்திபெற்ற
வடஆற்காடு ஜில்லா, அரும்பாக்கம் வைத்தியம் கோ. நாராயணய்யர்
அவர்களால் தயாரிக்கப்பட்ட மருந்துகள்.

## ஞானனந்தரின்

| | |
|---|---|
| கூஷ்பாண்ட லேகியம் (20 நாள் சாப்பிடக்கூடிய டப்பி1-க்கு) | ரூ. 2—0—0 |
| குஸ்குஸ் லேகியம் (பித்த ரோகிகளுக்கு) | „ 1—4—0 |
| ஜீரகாதி லேகியம் (அஜீரணத்துக்கு) | „ 1—4—0 |
| தூதுவளை லேகியம் (க்ஷயரோகத்துக்கு) | „ 0-12—0 |
| சகாதேவி தைலம் (ஸ்நானத் தைலம்) | „ 1—0—0 |
| பூவரசங்காய் எண்ணை (சகல சர்ம ரோகத்துக்கு) | „ 1—0—0 |
| வாய்வு எண்ணை (சிசுக்களுக்கு மாற்றெண்ணை) | „ 1—0—0 |
| கஸ்தூரி மாத்திரை (20 மாத்திரை கொண்டது) | „ 0-12—0 |

இரண்டு வருடங்களுக்குட்பட்ட யானைக்கால் மருந்து (நான்கு நாளைக்கு) ரூ. 15.
இன்னும் சகலவிதமான ரோகங்களுக்கும் எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

ஞானனந்தர் ஆயுர்வேதிக் ஹோம்,
1, கிருஷ்ணப்ப நாயக்கன் அக்கிரஹாரம், ஜி. டி. சென்னை.

---

டிடக்டாஸ் அல்லது துப்பு (ரகசியம்) அறியும் கருவி.

இதன் உபயோகம் யாதெனில் இருப்பிடத்திலிருந்தே உம்முடைய காதலியையும் அதோடு அவள் செய்யும் காரியங்களையும் அவள் அறிந்துகொள்ளாமலேயே இதன் மூலமாய்ப் பார்க்கலாம். உம்முடைய பின்னும் முன்னும் உமக்குத் தெரியாமல் நடக்கிறதை ஏககாலத்தில் இரண்டையுய் இதன் மூலமாய்க் கண்டு கொள்ளலாம். உமக்குத் தெரியாமல் உம்மைப் பின் தொடர்ந்து வருபவரை நீர் திரும்பிப் பார்க்காமலே இதன் மூலமாய் கவனித்துக்கொள்ளலாம். இன்னும் பலவித ரகசியங்களை இதன் மூலமாய் ஒருவரும் தெரிந்துகொள்ளாமல் கண்டு பிடிக்கலாம். இத்துடன் பல கலர்களால் தயாரித்த 6 பிரஞ்சு படுக்கை அறையின் அழகிய போட்டோ படங்களுடன் ஷை கருவி விலை ரூ. 2–0–0.

பாரிஸ் எம்போரியம், ஜி. டி. மதராஸ்.

---

## "மாருதி ஆருடம்"

சந்தேகமுள்ள 5 கேள்விகள் எழுதி ஒரு கவரில் சீல்செய்து ஒரு ரூபாய் மனியார்டருடன் அனுப்பினல் உங்களுக்கு ஆருசரேய உபசத்தினுல் கேள்விகளுக்கு பதில் தெரிவிக்கப்படும். இதா கேள்வி ஒன்றுக்கு அணு 4. ஒருவருஷ மாதபலன் ரூபாய் இரண்டு. வெளிநாட்டிற்கு 5 கேள்விகளுக்கு ரூபாய் இரண்டு ஒரு வருஷ மாதபலன் ரூபாய் நாலு.

## "மாருதி கவசம்"

இதை அணிந்துகொண்டால் சகலகாரியமும் கைகூடிவருவதும் பரிட்சை, வியாபாரம், வழக்கு முதலியவைகளில் ஜெயமும், மனக்கவலையையும், நவக்கிரக தோஷங்களையும நீக்கும். விலை ரூ. 2—4—0 வெளிநாடு ரூ. 3—8—0.

"ஸ்பெஷல் கவஸம்" பெரும்பாடு, மலடு, பில்லி, சூண்யம் முதலிய தீராத வியாதிகளுக்கு சாஸ்திரோக்தமாய் சாந்தி ஹோமம், ஜெபங்கள் செய்து ரக்ஷை அனுப்பப்படும். விலை 15 முதல் 35 ரூபாய் வரையில்.

குறிப்பு—ஜாதக நகலாவது கடிதம்எழுதும் நேரத்தையாகிலும் குறித்து அனுப்பவேண்டும்.

M. வேணுகோபாலு பிள்ளை,
மாருதி ஆருடம்,
கள்ளக்குரிச்சி, (தென்னுர்காடு.)

---

வித்வத்தம்! அநுபவம், ஆச்சரியம்! விநோதம்! ஆநந்தம்!
விசித்திரம்! அற்புதம்! இவைகளெல்லாம் அடைவது எப்படி?

## எமது "ஆநந்த குண போதினி"

ஆநந்த குண போதினி அறிவை விளக்கி உற்சாகத்தைத் தரவல்லதான உயர்ந்த நூதன செந்தமிழ் மாதப் பத்திரிகை.

பத்திரிகாசிரியர்.—எஸ். ஜி. ராமாநுஜலு நாயுடு.

| | |
|---|---|
| வருஷ சந்தா:—இந்தியா, பர்மா, சிலோன் முதலிய இடங்களுக்கு | ரூ. 1—0—0 |
| மாதிரிப் பிரதி இனும். வெளிநாடுகளுக்கு | ரூ. 1—4—0 |

சித்திரை மாதத்திலிருந்து வெளிவந்துலவுகிறது.

டி. இராஜகோபால் முதலியார்,
ஆநந்த குண போதினி ஆபீஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை.

---

# சிட்ரன் கார்கள்.

## ரூ. 3,295.

பெட்ரோல் கன்ஸம்ப்ஷன் 35 மைல்கள்.

வைத்திருக்கக் குறைந்த செலவு. குறைந்த விலை.
முற்றும் எஃகாலான புதிய 'பாடி' உடையது.
நான்கு சக்கரங்களும் பிரேக்குகள் கொண்டது

11. 5. குதிரைச்சக்தி. (20 குதிரைச்சக்திவரையில் அதிகரிக்கும்.) சுகமானஐந்து 'ஸீட்கள் கொண்டது. ஐந்து பலூன் டையர்கள் கொண்டது' கால்வைக்க நிறைய இடங்கொண்டது. கிளாக் உடையது. ஸ்பீடோ மீட்டர் உடையது. மிக சமீபத்திய அபிவிருத்திகளுடன் கூடிய டாஷ்போர்டு லாம்பு கொண்டது.

காட்டுப்புர ரஸ்தாக்களுக்கும் மணல் பாதைகளுக்கும் இந்த கார்கள்மிக உபயோகமானவை. எவ்வித கிராம ரஸ்தாக்களுக்கும் நன்கு ஏற்றது. ஸ்பேர் சாமான்கள் எப்பொழுதும் கிடைக்கும். விவரங்களுக்கு கீழ்க்கண்ட விலாசங்களுக்கு எழுதுக:—

ஸோல் ஏஜண்ட்கள்:—

தி டிரான்ஸ்போர்ட் கம்பெனி,
புதுக்கோட்டை.

எல்பின்ஸ்டன் கம்பெனி லிமிடெட்,
மௌண்ட் ரோட், சென்னை.

ராய. சொக்கலிங்கனல் காரைக்குடி ஊழியன் அச்சுக்கூடத்தில் அச்சிட்டு வெளியிடப்பெற்றது.

